உ

குருவே துணை

வண்ணச்சரபம்

# அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்

# பிள்ளைத் தமிழ்



நூலாசிரியர் :

தவத்திரு. முருகதாச சுவாமிகள்



திருவாமாத்தூர்

தண்டபாணி சுவாமிகள் திருக்கோயில்

கும்பாபிஷேகம் விழா 79-ம் வருடக் குருபூசை விழா

நினைவு மலர்

1977

உ

குருவே துணை.

வண்ணச்சரபம்

# அருள்திரு. தண்டபாணி சுவாமிகள்

# பிள்ளைத்தமிழ்



நூலாசிரியர்:
தவத்திரு. முருகதாச சுவாமிகள்
தலைவர்
கௌமார மடாலயம்
திருவாமாத்தூர் – விழுப்புரம்



திருவாமாத்தூர் - கௌமார மடாலயம்
வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் திருக்கோயில்
திருக்குட நன்னீராட்டு விழா
3—7—77-ல் நடைபெற்றபோது
சிரவணபுரம் கௌமார மடாலயத் தலைவர்
தவத்திரு. சுந்தர சுவாமிகளால் வெளியிடப்பெற்ற
நினைவுமலர்.

# பதிப்புரை

தேனினும் இனிய நம் செந்தமிழ் மொழியில் உள்ள இலக்கியங்களைத் தொண்ணூற்றாறு என வகைப்படுத்தினர் ஆன்றோர். அவற்றுள் ஒன்று பிள்ளைத்தமிழ் கடவுளரையேனும், கடவுள் அருள் பெற்ற அருளாளரையேனும் குழந்தையாகப் பாவித்து. அவரைப் பாட்டுடைத் தலைவராகக்கொண்டு பத்துப் பருவங்களில் பருவம் ஒன்றுக்குப் பத்துப் பாடல்களாக நூறு பாடல்களில் இயற்றுதல் இந்நூலின் இலக்கணமாகும் இம்முறையில் சான்றோர்களால் பாடப்பெற்றுள்ள பிள்ளைத்தமிழ் நூல்கள் மிகப் பலவாகும்.

இந்நூல் தெய்வ அருள்நலம் வாய்ந்த சான்றோரைப் பாட்டுடைத் தலைவராகக்கொண்டு பாடப்பெற்ற வகையினதாகும். இந்நூலின் பாட்டுடைத் தலைவராகிய வண்ணச்சரபம் அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள் 1839-ல் திருநெல்வேலியில் தோன்றியவர். இளமையிலேயே முருகனருள்பெற்ற சீலர். பல நூல்களின் ஆசிரியராகவுள்ளவர் தவமும் புலமையும் தாங்கியவராய் – அருள் நலமும், ஒருமைப்பாட்டுணர்வும் கொண்டவராய் விளங்கியவர்.

மும்மணிக் கோவைபல மாலைபல அந்தாதி
மூவகைய பல இன்னவா
முதுநெறிப் பனுவல்பல புதுநெறிப் பனுவல்பல
முத்தமிழ்ச் சுவைவழாமல்
இம்மணிற் புலவர்பலர் மகிழ்வுறக் கொடுத்துளேன்
இப்போதும் நுவலுகின்றேன்
இன்னமும் நுவலுவேன் ... ... ...

என்று வீறுகொண்டு ஒரு லட்சம் பாடல்களை அருளியவர். மேலும் அவைகளைத் தாமே பனையோலைச் சுவடியில் 'சர்வ சாதாரணி' என்ற எழுத்தாணிகொண்டு எழுதிய அருட்பண்பினர். இத்தகைய அருட் செல்வர்மீது இயற்றப்பெற்ற இந்நூல் இலக்கியமாகத் திகழ்வதன்றித் துதி நூலாகவும் அமைந்துள்ளது.

இந்நூலை இயற்றியவர் திருவாமாத்தூர் கௌமார மடாலயத் தலைவரும் அடியேன் தந்தையாருமாகிய தவத்திரு. முருகதாச சுவாமிகளாவர். பாட்டுடைத் தலைவராகிய சுவாமிகள் பெயரராகவும் பெயரைக்கொண்ட பெயரராகவும் விளங்குபவர்

இந்நூல் சுமார் 30 ஆண்டுகட்குமுன் இயற்றப்பெற்று, பாட்டுடைத் தலைவராகிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் 100-வது அவதார விழா பிரமாதி ஆண்டு கார்த்திகைத்திங்களில் நிகழ்ந்த போது அருளாளர் பலர் முன்னிலையில் அரங்கேற்றம் நிகழ்ந்தது. தற்போது ஷை சுவாமிகள் 79–வது குருபூசைவிழா நிகழ்வதோடு,

அவர் தம் திருக்கோயில் திருக்குட நன்னீராட்டு விழா நடைபெறும் 3—7—77-ல் பதிப்பித்து, நினைவு மலராக வெளியிடப் பெறுவது பல்லாற்றானும் பொருந்துவதாகும்.

இவ்வரிய நூலில் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் சிறப்புகளையும், வரலாற்றுண்மைகளையும் காணலாம். இவற்றை ஓதி உணர்ந்து பயன்பெறும் வகையிம் கும்பாபிடேக நினைவு மலராக வெளிவரும் இந்நூல், திருவாமாத்தூர்க் கௌமார மடாலயத்தின் பதிப்பாக வெளியிடப்பெறுகிறது. இந்நூலிற் சொல்லியபாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார்கட்கு முருகப்பெருமான் வற்றாக் கருணை நலமும், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் திருவருளும் உண்டாகுமாறு அவன் அருளாலே அவன் தாள் வணங்கி வேண்டுகிறேன்.

கௌமார மடாலயம்,
திருவாமாத்தூர்,
3—7—1977

அன்பன்,
தி. மு. சங்கரலிங்கம்,
தமிழாசிரியர்.





நூலாசிரியர் :
தவத்திரு முருகதாச சுவாமிகள்,
கௌமார மடாலயத் தலைவர்,
திருவாமாத்தூர்.

உ
குருவே துணை.

# மகான்-வண்ணச்சரபம் - அருள்மிகு தண்டபாணி சுவாமிகள் பிள்ளைத்தமிழ் - முன்னுரை

வெண்பா

*சிரவைபிரா மானந்த தேவன், குருவாய்ப்*
*பரவுதண்ட'பாணிப் பரஞ்சீர்—விரவுபுகழ்*
*சார்பிள்ளை வண்கவிதை சாற்றினன், பேரனெனச்*
*சார்முருக தாசத் தவன்.*

1 பிள்ளைத்தமிழ் : என்பது, தமிழ்ப் பிரபந்தவகை தொண்ணூற்று ஆறனுள் ஒன்றாகும் இந்நூல் செய்வத்தையேனும். தெய்வத்தோடு ஒப்ப வாழ்ந்த அருளாளர்களையேனும். அரசர்களையேனும், பிள்ளைமைப்பருவமுடைய முறையில், காப்புப்பருவமுதல், சிறுதேர்ப்பருவம்வரையுள்ள பத்துப் பருவங்களில், பருவமொன்றுக்குப் பத்துப் பாடல்களாகப் பாடப்பெறல் முறைமையாகும். ஒவ்வொரு பருவத்திலும் இறுதியில் சந்தப்பாடல்களாகப் பாடுவதுண்டு. இந்நூற்றலைவராயுள்ள வண்ணச்சரபம் - தண்டபாணி சுவாமிகளியற்றிய ஆறு பிள்ளைத்தமிழிலும் உள்ள முறையைப் பின்பற்றி இதன் ஆசிரியரும் அவ்வாறியற்றியுள்ளனர். மேலும் காப்புப் பருவத்தில், சிவபிரானுக்குப் பாடுவது சந்தமாகவே ஆன்றோர் பாடியுள்ளனர், அவ்வாறு சிவபிரான், உமை, கணபதி, முருகப்பெருமான், வேல், மயில், சேவல், திருமகள், கலைமகள், வள்ளிநாயகி, தெய்வ யானை—என்ற எண்மர்கட்குக் காப்புப்பருவத்தில் சந்தப் பாடல்களும். முதலில்'திருமால், இறுதியில், பொதுத் தெய்வமென்ற இரு கவிகள் மட்டும் இரட்டையாசிரியப் பாடல்களும் உள்ளன.

பிள்ளைத்தமிழில், ஆண்பால், பெண்பால். என்ற இருவகையுண்டு. பெண்பாலுக்கு, இறுதியிலுள்ள சிற்றில், சிறுபறை சிறுதேர் என்ற மூன்றை விடுத்து. கழங்கு—நீராடல், ஊசல் என்றமைப்

அதன் விவரம் முதற் காப்புப் பருவத்திலும், அடுத்த செங்கீரைப் பருவத்தின் முதற்கவியிலும் சுருங்க விளக்கப்பட்டுள்ளது.

வண்ணச்சரபம் - தண்டபாணி சுவாமிகள், தனது உபாசனை அனுபவம், இடையே வரலாறு, கலந்து கூறிய நூல் 'குருபரதத்துவம்" அதிற் கூறாமல் நின்றதுடன் பின்னிகழ்ந்தவற்றையும் விளக்கி, அவரது மகனாரும், மாணவருமான தவத்திரு தி. மு செந்திநயக சுவாமிகள் தண்டபாணிவிஜயமென்று கவியாக 450 பாடலில் பாடினர். பின் தண்டபாணீயமென்ற உரைநடை நூலொன்றும் எழுதினர். இவற்றின் சுருக்கமாக சென்னையில் நடத்த சுவாமிகள் விழாவில் வெளியிட்ட நூல் ஒன்றுளது இவற்றினை அறிந்தோர்கட்கு, இந்நூலிற் கூறப்பட்ட வரலாற்றுக் குறிப்புகள் புலனாகும். இதனைப் படிப்பவர்கள் அறியும்பொருட்டு, சிலவற்றை விரித்தும், குறிப்பாயும் ஒவ்வொரு பாடலின்கீழ் அமைக்கப்பட்டிருப்பது பயனுடையதாகும். முற்றும் எழுதினால் நூல் விரிவாகுமென்பதால் குறிப்பாயெழுதப் பெற்றது.

3. காப்புப்பருவம்: முருகப்பெருமானை உபாசிப்பவர் தந்தையாகப் பாவித்துப் பேசுவர், 'எந்தையே யீசா" என்பது திருவாசகம், 'எந்தையீசன் எம்பெருமான்' என்பர் சம்பந்தர். அம்முறையில் வள்ளியம்மையைப்பெற்ற தாயாகவும், தெய்வயானையம்மையை வளர்ப்பு (செவிலி)த் தாயாகவும் பாடுவர் சுவாமிகள். எங்களைப் பெற்ற தாய் நீ! என்பர் வள்ளிநாயகி பிள்ளைத்தமிழில் அவளும் எம்மை வஞ்சமற அமுதூட்டி ஆதரிப்பதுமுண்டு என்று கூடி தெய்வயானை அம்மையாரைக்கூறுவர் தண்டபாணி சுவாமிகள். முருகன் காட்சியைத் தூலக்கண்களாற் காணவேண்டிய பேராவலுடன் திருமலையென்ற பாண்டி நாட்டு முருகன் மலைக்கோயிலில் சென்று பாடி வேண்டினர். காட்சி காணாமையால், உயிர்விடக்கருதி உச்சியில் நின்று பூமிநோக்கி உருண்டனர் உடல் கீழே வந்தது. ஊனமொன்றுமில்லை. ஆனால் இடது தோளில் கல்லின் உராய்தலால் இரத்தம் சிந்தியது. அந்தப் புண்மீது அம்மை. அடிகள் மனவெளியில் வந்து, வலிந்து உறவு கொண்டாடி, திருநீற்றை நெற்றியிற் பூசி, வாயிலிட்டு புண்ணின்மீதும் தடவினள். இதைக் காயந்தீர்த்த சருக்கம். திருமலைச் சருக்கத்திற் காணலாம் (குருபரதத்துவம்). இவ்விவரத்தைக் காப்புப்பருவத்தில் 8-வது கவியிற் குறிப்பிடுகின்றனர் இதன் ஆசிரியர்.

வது மனைவி, பேச்சுமுத்தம்மையுடன் செய்த நோன்பின் பயனாக, தண்டபாணி சுவாமிகள் பிறந்தனர். நெல்லையூர் காந்திமதியம்மையின் தொண்டராவார் தந்தையார், அம்மையின் திருமண விழாவன்று சென்று அம்மைமுன் தமது குறையிரந்தனர். அசரீரியாக ஒன்றென்ன இரு மகவு பெறுவாய்! என்றவாறு தண்டபாணி சுவாமிகள் தோன்றினர் பிறந்தவுடன் அழாமலும் பாலுண்ணாமலுமிருந்தனர் பலரும் கவன்றனர். தந்தை கனவில் இறைவன் தோன்றி-நீலச் செவந்திப்பூவும் திருநீறும் உதவினர். என் பெயரான சங்கரலிங்கமென்ற பெயரை! இடுக என்றனர். கண் விழித்தபோது, பூவும் நீறும் கையில் இருந்தது. அப்படியே பெயரிட்டு நீறணிந்தனர். இவ்விவரம் முதற்பாட்டில் வருகிறது. அடுத்த பாட்டு-ஒரு வருடம் நிறைந்தபோது செய்த நிகழ்ச்சி கூறப்பெற்றுள்ளது.

4-வது பாட்டில், திருநெல்வேலியின் ஆதி நிகழ்ச்சி, 5-வதுபாட்டில், இவர் முதல் முதல் பாடல் பாடிய அற்புதச் செயல்கள் கூறப்பெற்றுள்ளன,

5. தாலப்பருவம்: சுவாமிகள் முற்பிறப்பில் அருணகிரிநாதராயிருந்தவரென்பதை அன்பரறிவார்கள். ஆகவே அவருக்கும் இவருக்கும் உள்ள ஒற்றுமை வரலாற்றுடன் இணைந்திருப்பதை, 3-வது பாடல் கூறுகிறது. 6-வது பாட்டில், திருச்செந்தூரில் முருகன் மொழிப்படி பதினறு பனுவல் பாடி அரங்கேற்றிய செய்தி, 7-வது கவியில் சிரவை கௌமார மடாலயத்தின் ஆதிகுருநாதரான அருள் திரு இராமானந்த சுவாமிகளுக்கு உபதேசித்த செய்தி கூறப்படுகிறது

6 சப்பாணிப்பருவத்தில்: கோளநாடுசென்று சுவாமிகள் திரும்பிய நாளொன்றின் இரவில் திருமால் வைணவப்பிராமணராகி மோர், உப்பு, உப்பிலிட்ட மிளகாய் 2, சோறுடன் தந்ததைப் பெற்ற உன் கைகளாற் சப்பாணி கொட்டுக என்றும், பனையோலை ஏட்டில் எழுத்தாணியின் துணைகொண்டு பாடலெழுதும் உன் கைகளைக் கொண்டு கொட்டுக என்றும், ஊடல் காரணமாக ஏடுகளைத் தீயிலும் கடலிலும், ஆற்றிலும் இட்டு அழித்தது உன்கை என்றும், திருநீறு மேனி முற்றும் பூசி, வலது தோளில் தென்கலைத் திருநாமம், இடது தோளில் வடகலைத் திருநாமம் இடுவதற்குரிய கை என்றும் கூறி, அவற்றல் சப்பாணி கொட்டுக என்றும் கூறுகிறார்

7. முத்தப்பருவம்: உலகியல் முத்து பயனற்றவை. அறிஞர் விரும்பார் வேயீன்றமுத்தான சிவன்வாழும் திருநெல்லையிற் காந்திமதியம்மை (வெண்மையான சந்திரன் ஒத்த முகம்) பகர்ந்த அருள் மொழிப்படி பேச்சுமுத்தின் வயிற்றிற்பிறந்த முத்துப்போன்றவன் நீ! முத்தாம்பிகையம்மை விளங்கும் திருவாமாத்தூரிலிருக்கின்றாய் எனவே முத்தம் கொடு என்று முறையிடுகின்றார்.

உன் தந்தையுடன், தாய் நால்வர் உன் முத்தம்பெற்றனர். உனக்கு முத்தமும் தந்தனர், என்று தொடர்பு கூறப்பெறுகிறது. தசாங்கம், பத்து உறுப்புகள் பகர்ந்திருப்பது பொருத்தமாகும். 5-ம் பாட்டில் அருணகிரிநாதருக்கும் இவருக்கும் உள்ள பல இயல்புகள் எடுத்தாளப்பெற்றுளது.

8. வருகைப்பருவம்: நெடுங்குளமென்ற நகரில், ஒரு பார்ப்பன அம்மையார் இட்ட அன்பின் உணவுபற்றி, சந்தப்பாடல் ஒன்றிற் கூறியிருப்பது சிறப்பு. விவரம் பாடலிற் காண்க.

9. அம்புலிப்பருவம்: பிள்ளைக்கவியில் அம்புலிப் பருவத்தைப் புலி என்பர்-இவர் எளிதாக சந்திரனுக்கு, அடிகளை ஒப்புக்கூறி, பேதமென்ற பகுதியில், சந்திரன் கலை பதினாறுதான். இவரது 16, 32, 64 கலைகளைக்கொண்ட சந்தப்பாடல் பல இனிமையாகக் கூறியவரென்று விளக்கியிருப்பது மிக்க சிறப்பாகும். இன்னும் தானப்பகுதியில் திருவருள்நாட்டமென்ற நூலில் சந்திரனைப் பாடியதை எடுத்துக்காட்டி, தலமுறைப்படி அவன் விமானம் பெற்றது ஆமாத்தூர் என்பதையும் தண்டத்தில், அப்பாகியின் சிறப்பான, திருவட்டப்பாறையின் வரலாற்றைக்கூறி அச்சுறுத்தியிருப்பதும், படித்துச் சுவைக்கவேண்டிய அரிய கருத்துக்கள். பிள்ளைமதி, கூனல்மதி, பிள்ளைமதி, குறைமதி, வெண்மதி யென்றெல்லாம் கூறியது நகைச் சுவை தருவதாகும்.

10 சிற்றிற்பருவம்: சிறுவீடு, சிறு உடம்பாகிய உடல், என்ற இரண்டுக்கும் இசைய, அழிக்காதேயென்று வேண்டப்பெறுகிறது திருவடிகளின் பெருமை கூறுவது சிந்தனைக்கு உரியது. இதிலும் சிரவைச் சுவாமிகள் முதலியோர் சிரசில் புனையும் சிறப்பினதல்லவா உன் திருப்பாதம், என்றெல்லாம் விளக்கப்பெறுகிறது. சிறு பெண்கள் வேண்டும் முறை இனிய சுவையாகும்.

11. சிறுபறைப்பருவம்: பறை-தப்பட்டை, சிறுவர் தட்டி மகிழ்வதாகக் கூறப்பெறுவது. முரசுபோல்வதாம். அது முழக்கும்போது, ஒரு கருத்தைக் கூறி முழக்குவர். போர், மணம், கொடை இப்படிப் பல்வகை. ஆகையால் இன்னின்ன செய்தியை மக்களறியக்கூறி. உன் சிறு பறையை முழக்கென்பதில், பலகருத்துக்கள் கூறப்பெற்றுள்ளது. (முழக்கம் ஓசை) பல உள்ளனவென்று கூறி விளக்குகிறார் ஆசிரியர்.

12 சிறுதேர்ப்பருவம்: இதில் தண்டபாணி சுவாமிகள், அல்லமர் - விட்டுணுகமலயோகி, இவர்களைப்போன்று, சொரூப சித்தி பெற்று தீய மக்களை ஒறுத்தற்பொருட்டு, முருகன் அசுராதிகளையழித்ததுபோல் தோன்றுநர்ந்து அடக்குதல்செய்யவிரும்பினர் சுவாமிகள். அது பின் நிகழட்டும்! இப்போது அதற்கு முன்னோடியாக உன் சிறு தேரை உருட்டி ஒப்பச்செய் என்று கூறப்பெற்றிருக்கிறது

13. இப்படி ஒவ்வொரு பருவத்திலும் திருவாமாத்தூர்த் தலச் சிறப்பு. சுவாமிகள் வரலாறுகள் பல, எளிய இனிய நடையில், சந்தயாப்பும் கலந்து பாடியிருப்பதைப் படிப்பவர் அறியலாம். பாட லியற்றுவதென்ருல். அதற்கான இயல்புடனமையவேண்டும். பாட- லெல்லாம் பாட்டாகாது. இது முன்னைய தவத்தொடர்பால் வருவ தாகும். வெறும் கற்பனை, அரசர்களின் கொடைச்சிறப்பு, சோலை மலை முதலிய சிறப்புகள்பற்றிப் பாடியவை, படிப்பவர்கட்குப் பொது வான உணர்வைத்தரும். கடவுளியல்பைப் பாடுவதே பாடுபவர்கட் கும் படிப்பவர்கட்குப் பயன் தருவதாகும். ஆண்டவன் புகழ் பாடும் தன்மையே சிறப்பு. ''வெறிகமழ்மென் மலர்ப்பூசை பலநாட்செய்து" வருவது அவ்வகைப் பாடல் என்பர் சுவாமிகள். வடலூரடிகள் ஆண்டவன் புகழ் பாடுவதே அருட்பாட்டு என்பர். அப்படி ஆண்டவ னருள்பெற்ற அருட்பெருந்தகை-தண்டபாணி சுவாமிகள். அவர்கள் பாடிய பாடல்கள் ஓரிலக்கமாம். அப்பெருமான்மிசை, இந்தப் பிள் ளைத்தமிழ் பாடப்பெற்றிருக்கின்றது ஆறு பிள்ளைத்தமிழ்பாடியவர் தண்டபாணி சுவாமிகள்.

14 ஆசிரியர்: இவர், வண்ணச்சரபம், தண்டபாணி சுவாமி கள் மகனும் மாணவருமான, சந்தப்புலமை, தி. மு. செந்திநாயக சுவாமிகள் முதல் மகனுவர். சிரவணபுரம்-இராமானந்த சுவாமிகள் பால் ஆறெழுத்துபதேசம்பெற்றவர். "குலவித்தை கல்லாமற் பாகம் படும்'' என்றவாறு. கல்விப்புலமை இயல்பாக வரப்பெற்றவர். தந்தையாரிடம் பயின்றதன்றி எங்கும் வெளியேசென்று கற்கவில்லை. இவரது பாட்டியார் சுந்தரத்தம்மையவர்கள். பெரும் புலமையினர். எனவே ஆத்திசூடி முதல் பல சந்த வண்ணங்களையும் பாடம் செய்ய வைத்தனர். சிரவை-கௌமார மடத்திலும் சிலகாலம் தங்கிப் பயின்றனர். இவை யாவும் உறுதுணையாகித் திருவருட்டுணை உள் ளூர நின்று விளக்கப்பெற்ற பயனேயாகும். கருவிலே வாய்ந்ததிரு, கல்விச்செல்வம். இந்நூல் ஆசிரியரிடம் இது இயல்பாயேற்பட்டது,

இதனோடு திருவாமாத்தூர் முத்தாம்பிகை வடபழனி ஆண்ட வர், கொளஞ்சியப்பர்மீதும் பிள்ளைத்தமிழ் பாடியுள்ளார், இது போற் பல நூல்களின் ஆசிரியராயும். இவற்றின் உரையாசிரிய ராயும் உள்ளவர். திருவாமாத்தூரில் உள்ள கௌமார மடாலயத் தும், பழனியில் உள்ள தண்டபாணி சுவாமிகள் மடாலயத்தும், தலை வராயிருந்து பணியாற்றுகின்றனர்.

சிரவை கௌமார மடாலயத்தின்கண் இடையறாப் பேரன்புடன் எங்களுடன் கலந்து செயல்புரியும் கடப்பாடுடையவர். இளமை முதலாகவே மேடி மடாலயத்தின் தொடர்புடைய இவர், வண்ணச் சரபம்—அருள்மிகு. தண்டபாணி சுவாமிகளது, நூருவது அவதார விழாவில் இதனை அரங்கேற்றியுள்ளனர். அது விவரம் தவத்திரு

கந்தசாமி சுவாமிகளும், பிறரும் கூறிய சிறப்புப் பாயிரத்தாலறிய வுள்ளது. இதுவரை அச்சேருமலிருந்த இந்தப் பிள்ளைத் தமிழ்நூல், தண்டபாணி சுவாமிகளது 79-வது குருபூசையுடன், கும்பாபிடேக விழாவும் நடைபெறுகின்ற இந்த நன்னாளின் நினைவு மலராக வெளி வருகின்றது மிக்க பயனுடையதாகும்.

இந்தப் பிள்ளைத்தமிழ்நூல், தண்டபாணி சுவாமிகளது துதி நூலாகவும், வரலாற்று நூலாகவுமிருப்பதும், அந்தந்தப்பாட்டின் அடியில், வரலாற்று விவரம் குறிக்கப்பெற்றிருப்பதும், படிப்பவர் கட்கு மகிழ்வைத் தருமென்பதில் ஐயமில்லை. கந்தசாமி சுவாமிகள் சிறப்புப்பாயிரக் கவியில் பாட்டனென்ற சொல்லை நான்கு பொரு ளில் அமையும்படி பாடியுள்ளதும் பிறவும் இதன் ஆசிரியரான தவத் திரு. முருகதாச சுவாமிகளிடம் தனக்குள்ள அன்பை வெளிக்காட்டு முறையிலமைந்திருப்பது எண்ணி எண்ணி மகிழ்தற்குரியதாகும்.

இன்னும் பல எழுதலாமானாலும், விரிவஞ்சி இம்மட்டில் விளக்கி பிறவற்றைப் படிப்பவர்களறியும்படி விடுத்து ஆசிரியருக்கு நன்றியும் வணக்கமும் தெரிவித்து, திருவருள் அனைவருக்கும் உண்டாக வேண்டுகிறேன்.

கௌமார மடாலயம்,<br>சிரவை.<br>3—7—1977

இங்ஙனம்,<br>சுந்தர சுவாமிகள்,

தெய்வமே துணை.



உ

குருவே துணை.

சிரவணபுரம்-கௌமார மடாலயம்-ஆதிமுதல்வர், அருள்திரு இராமானந்த சுவாமிகள், திருமுன்புக்கு இந்நூலைப் பார்வையிட்டருள அனுப்பியபோது விடுத்த

# விண்ணப்பக் கவிகள்

### வெண்பா

*தேனார் தமிழ்ச்சிரவைத் தேசிகனென் றன்பர்தொழக்*
*கோனா விளங்குங் குணமலையே—வானாரும்*
*வந்திக்கும் பேறுபெற வாஞ்சித்தேன் உன்றிருத்தாள்*
*சிந்திப்பேன் நற்கிருபை செய். 1*

*வண்ணச் சரபகுரு வண்புகழ்ப்பிள் ளைத்தமிழ்,எண்*
*ணண்ணத்திற் காட்டியவா றேயிசைத்தேன்—விண்ணப்பம்*
*ஏற்றுனது பார்வை யினிதமைத்து, மெய்யடியார்*
*போற்றுநலம் எய்தப் புரி. 2*

*தாலதிட் டி யூடுன் உருத் தோற்றங்கண் டின்புறவே*
*சால விரும்பித் தவித்திட்டேன்—ஞாலமிசை*
*உள்ளவிவ காரமெவ்வா றுற்றிடினும் உன்றனருள்*
*கள்ளமறக் கொள்ளலென்வேட் கை. 3*

*சிரவைக்கௌ மாரத் திருமடத்திற் றொண்டர்*
*பரவற் கினியவுன்றன் பாதம்—விரவுமன்பாற்*
*கண்டு பணிந்துவக்கக் காதலித்தேற் குட்கருணை*
*கொண்டுவிடை நல்கல் குறி. 4*

*உன்னதருள் வாழ்க! ஒளிரிராமா னந்தப்பேர்*
*நன்னாமங் வாழ்க! தவ நல்லடியார்—கன்னலுறழ்*
*செந்தமிழ்ச்சீர் வாழ்க! திருவார்கௌ மாரநெறி*
*சந்ததமும் வாழ்க தழைத்து. 5*

பிரமாதி ஸ்ரீ
ஆடிமீ 13-ம் நாள்
திருவாமாத்தூர்.

இங்ஙனம்,
மீளா அடிமை,
**தி. செ. முருகதாசன்.**

குருபாதமே கதி.

குறிப்பு:—இந்தப் பிள்ளைத்தமிழ் நூலை-அருள்மிகு - வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளது அவதார நூற்றாண்டு விழாவைக் கொண்டாடியபோது அரங்கேற்றப்பெற்றது அவ்வமயம் உடனிருந்த அன்பர்களால் இயற்றப்பெற்றவை இச்சிறப்புக் கவிகள்.

# சாத்துகவிகள்

## சிரவணபுரம் - கௌமார மடாலயம்

## தவத்திரு - கந்தசாமி சுவாமிகள் இயற்றியன

### சந்தக்கவி

*தந்த தானன தத்த தனதன தானதானா—தய்யத் தனனா.*

உம்பர் பேணும யிற்கு மாகுரு நாதன் வார்தோ
ளின்கண் மேவரு ளைக்கி ளியொர்கலை யாகி யே,ஊன்
உண்டி யோரழி யக்க ருணை நிலை யோர்கள்வாழ்வாய்
நெல்லைப் பதியூ(டு)

உந்தும் ஞானஇ யற்ப டிவுகொடு மேவிமானார்
கும்ப மாமுனி முத்த மிழ்உ ததி மீதில்ஆனா(து)
ஒன்று சீகரம் ஒத்த ளவில்கவி மாலைபார்மேல்
வெள்ளத்(து) இசையா

நம்ப னேயென அக்க மணி பொடி காவி தோய்மா
தண்ட பாணிதி ருப்பு கழ்முருக தாசகோமான்
நன்கு வாழியெ னத்தொ ழுதிடுகௌ மாரமேலோர்
உள்ளத் தனிமேல்

நம்பு பாசனை மெய்த்த கையொட நு பூதிசேர்சீர்
கண்கொள் பார்வையி னிற்ற ருகுரவன், யாரும்விடார்
நன்றி னூடமை யச்செய் அதிதயை நீர்கொள்கார்கோன்
மெய்யற் புதமாய்

இம்பர் மீதமை யப்பு ரியுமுயர் ஆடல்ஓயா(து)
அன்பு ளோர்கள்து தித்த ரியதவ மேன்மை தோய்வான்
இன்ப ஆரமு தக்க வளமென நூறுபாவார்
பிள்ளைத் தமிழே

இங்கு பாடும்இ யற்பு லவன் எழில் நீளிராமா
னந்த நாதன்அ டித்து ணையிதய மீதில்மாரு(து)
என்றும் ஆர்அடி மைத்து றையின்வழி பாடுதானே
செய்மெய்த் தகையோன்

மொய்ம்ப ருதத வப்பு லமைசெறி வானவீரர்
செந்தி ஞயக னைத்த னதுபிதுர் ஆகஏய்வோன்
மூந்து தரதைநி கர்த்தி டுமுறைகொள் பேரனாநீன்
செல்வப் பொலிவோன்

மூங்கும் ஆர்வம்ஏ னுட்கொள்துணை வன்,மை மாயைதீர்பேர்
இன்ப சாகரம் உற்ற அமுதுகை கூடிவாழ்வான்
முன்ப ராவும்இ சைத்தி ரமுருக தாசனும்ஓர்
பிள்ளைத் தவனே

இக்கவியில் நூலின் தலைவரான தண்டபாணி சுவாமிகள், ஆசிரியரான இராமானந்த சுவாமிகள், தந்தையான, செந்திஞயக சுவாமிகள், நூலாசிரியரான முருகதாசர். இம்மூவர் பெயரும் அமையுமாறு, பாடிய கந்தசாமி சுவாமிகளின் சந்தப்புலமையாற்றலுக்கு. இது ஒரு சான்று தண்டபாணி சுவாமிகள் பரம்பரையன்பர்கட்கு சந்தப் புலமை சொந்தச் சொத்தாகும். அவர்கள் ஆசி அவ்வாருகும்.

''வண்ணமுறைமைமட்டில்-சற்றுமெனைச் சார்ந்தோர்க்கும் சந்தேகமின்று" என, விவாத அரங்கில் சுவாமிகள் கூறியுள்ளனர் விவரம் வரலாற்றிலறிக.

பி-ம். உம்பர்-தேவர்கள், வார்தோள்-நீண்டு உயர்ந்த தோள், அருணைக்கிளி - திருவண்ணாமலையிலிருந்த அருணகிரிநாதர். அவர் கிளியுருவமாகி, முருகன் தோளிலிருப்பவர். கலை-அவரது அமிசமாக அவதரித்தவர் தண்டபாணி சுவாமிகள் என்பது கருத்து. ஊன் உண்டியோர்-மாமிசமுண்பவர்.

உந்தும்-மேலெழுகின்ற. படிவு-வடிவம், உததி-கடல், சீகரம்-அலை, அது கடலில் உள்ள முத்துபோல்பவற்றை கரையில் உள்ளவர் பெறத்தரும். அதுபோல அரிய நூற்களைப் பாடிய சிறப்பு. நம்பன்-சிவபிரான், உள்ளத்தளி-மனமான கோயில் பார்வையினில்-கண்பார்வையளவில், கார்கோன்-மேகம், இம்பர்-இவ்வுலகர், தோய்வான்-அடையும்பொருட்டு, கவளம்-உருண்டை, தாதை-பாட்டன், மூழ்கும் - முழுகும்படியான, ஆர்வம் . மகிழ்வு-உட்கொள்துணைவன், மனதில் ஏற்கும் துணைவன் (தம்பி) என்ற உரிமை. உபதேசமாணவருள் முதியவர் கந்தசாமி சுவாமிகள், இளையவர் முருகதாசர் என்பதாம். சாகரம் - கடல், பிள்ளைத்தவன் - பிள்ளைமையில் தவமாகப் பிறந்தவர் என்பது. இக்காலம் தவவேடத்திலிருப்பதையும் குறிப்பால் விளக்கியதறியலாம்.

## கட்டளைக்கலித்துறை

*பாட்டனென் றா(ம்)மு ருகதாசர் பிள்ளைப் பருவஇயற்*
*பாட்டனென் றா(ம்)மு ருகதாச! நின்பிர பந்தம்என்!சாப்*
*பாட்டனென் றென்னைப் புரிநாவில் ஊறிமெய்ப் பத்திவழி*
*பாட்டனென் றோங்கிட மாற்றுவ(து) உற்ற பருவத்தையே.*

இ-ம். பாட்டன்-உடல் முறையிற் பாட்டன், பாட்டன் - பாட்டினை உடையவர், சாப்பாட்டன்-உணவில் விருப்பமுடையவன், நாவின் ருசியிலீடுபட்ட எனது நாவினுற் படித்தபோது, வழிபாட்டனாக, என் இயல்பை மாற்றியதென்பதாம்.

*அஞ்சாம் பருவம்தனைத் தாண்டி ஈமத்(து) அணைஒருரு*
*வஞ்சாம் பருவந்(து) அழிதல்கண் டேன்; நீ அறைதமிழ்,ஈர்*
*அஞ்சாம் பருவம் தழீயுற்ற பாட்(டு)அன்பின் ஆம்இருபான்*
*அஞ்சாம் பருவம் தழைஅபி டேகானந் தந்ததே.* 2

வி-ம். உடலுக்கு உரிய பருவம் ஐந்து. அவை, பால. குமார, எவ்வன, விருத்தாப்பிய, மரணம் என்பன. உடல் மரணமான இறுதிப் பருவத்தையுற்று மயானத்தில் உருவமானது வெந்து சாம்பலாகி அழிவதைக் கண்டேன். தமிழ் - இந்தப்பிள்ளைத் தமிழானது, ஈர்அஞ்சு ஆம்-ஈரைந்து பத்து-ஆகிய எண்களைக்கொண்ட பிள்ளைத் தமிழின் பருவத்தைக் கண்ட பயனாது இருபான் அஞ்சு ஆம்-இரு

பது ஐந்துகொண்ட நூருவது ஆண்டாகி, தண்டபாணி சுவாமிகளது சதாபிடேக விழாவைக் கண்டுகளிக்கும் பேறு உதவியது.

உடலுக்கமையும் முதற்பருவம் பிள்ளைப்பருவம். அது முறையே வளர்ந்து இறுதியில் மரணமுற்று மயானத்திற் சாம்பலாகி அழியும், இந்தப் பிள்ளைப்பருவப் பாடல் யாவும் குருநாதரது அவதார நூற்றுண்டு விழாவைக் காணச்செய்தது என்பது கருத்து. 2

*கள்ளைக் கரிம்மெய் திரிபாரா அமுதைக், கண்டைக்கலந்த*
*கொள்ளைக் கரிம்மெய் சரபற்கு, நீசெய் குலைப்பனுவல்,*
*பிள்ளைத் தமிழ்ப்பெயர் சூடல்கண்(டு) அஞ்சேன்;பிரசமலர்*
*வெள்ளைத் தமிழ்தான்என் றேயென் மதியை விளக்குவனே.*

வி-ம். கள்ளை-தேனையும், அமிழ்து என்ற சொல்லின் திரிபாகவுள்ள தமிழாகிய அமுதினையும், கண்டை-கற்கண்டையும்ஒத்த இன்சுவையுள்ள, நூல், வண்ணச்சரபமாகிய குருநாதர்மீதுபாடியபாடல்களைப் பிள்ளைத்தமிழ் என்ற பெயர் இருப்பதைக்கண்டு பயமடையேன். பிரசம் என்ற வெண்டாமரைபோன்ற எளிய, இனிய, அழகிய தமிழ்தான் என்று அறிந்து மகிழ்ந்தேன்.

'பிள்ளைத்தமிழ்' என்றால், அரிய பொருளும், முதிர்ந்த கடினத்தன்மையுமாக இருக்குமோ பிற நூல்கள்போல, என்று அஞ்சினேன். குலப்பனுவல் - என்பது, தண்டபாணி சுவாமிகள் குலப்பிள்ளை, செந்தியையர். அவர் பிள்ளையான தாமியற்றிய நூல் - பிள்ளைத் தமிழ்ப்பெயர்க்கு ஏற்ப இனியதாயிற்று என்பதாம். 3

*அனத்தன் துணைவியும், காயாம்பூ வண்ணம் அவிர்மெய் கொள்மே*
*கனத்தன் துணைவியும், சால்அற மாகிக் கவின்நந்திவா*
*கனத்தன் துணைவியும் சாரும் சதாபிடே கங்கொள் திருத்*
*தினத்தன்று மெய்யாங் கேறும்நின் பிள்ளைத் திறத்தமிழே.*

வி-ம். அனத்தன் துணைவி-அன்னவாகனமுள்ள பிரமன் மனைவி கலைமகள், காயாம்பூவண்ணம் அவிர்-காயாமலர்போன்றுள்ள மேக-மேக நிறமுடைய, நந்தன்-சங்கணிந்த திருமாலின் துணைவி திருமகள், சால் அறமாகிக் கவின்-மிகுந்த அற (தரும) வடிவான, நந்தி வாகனத்தன்-இடபவாகனமுடைய சிவனது துணைவி-உமையவள், இம்மூவரும் ஒன்றுசேரப்பெற்ற சதாபிடேகம் - நூற்றுண்டு விழா அமைந்த இத்திருநாளில், உன் பிள்ளைத்தமிழ்ப்பா அரங்கேற்றப்பெற்றது. 5

நேத்திரங் கொண்டுகண்(டு) என்செவி
வாயில் நிறைந்(து).உளமாம்
பாத்திரங் கொண்டு,கண்(டு) உண்டு,என்
துயரப் பசிதவிர்ந்தேன்
சாத்திரங் கொண்டுண்மை தேர்ந்த
முருகதா சப்புலவ!
காத்திரங் கொண்டுளர் ஊண்நேர்உன்
பிள்ளைக் கவியினையே.

வி-ம். நேத்திரம் கொண்டுகண்டு-பிள்ளைத் தமிழ்ப் பாடலைக் கண்ணாற்கண்டேன். பின்பு-செவியென்ற வாயில் நிறையஉண்டேன், மனமாகிய பாத்திரத்திற் சேமித்தேன். கண்ணாற்கண்டு, செவியால் உண்டு, மனதிற்கொண்டேன். இதனால் துன்பமாயிருந்த பசிதணியப் பெற்றேன். அறிஞர் நூற்களையுணர்ந்த முருகதாசரே! கா-கற்பகத் தருவை, திரம்-உறுதியென்று, கொண்டுளர். நம்பியுள்ள தேவர்கள், ஊண்நேர் - உணவான அமுதம்போன்ற பிள்ளைத்தமிழான பாடல்களை என்றவாறு. 6

கள்ளைக் கவிழ்க்கும்செங் கஞ்சன்,தன்
தாதைக்குக் காசினிப்பேர்க்
கொள்ளைக் கவின்மகட் டந்து,சிட்
டிப்பைக்கைக் கொண்டனால்
உள்ளைக் கவிதண்ட பாணிவண்
பாட்டன் உவகையுறப்
பிள்ளைக் கவிதருநீ பெறும்
பேறென்னை? பேசுவதே.

வி-ம். கள்ளை-தேனை, கவிழ்க்கும்-ஊற்றுகின்ற, செங்கஞ்சன், செந்தாமரை மலர்ப்பிரமன், தன் தாதைக்கு – தந்தையான திருமாலுக்கு. காசினிப்பேர்-பூமிதேவி என்ற பெண்ணை (மகளை) உதவி– சிருட்டியைப் பெறலானான். பிரமன் படைத்தது பூமி, அப்பெண் மகவை, திருமால் மனைவியாய்ப் பெற்றாரென்பது நயம் அமைந்த கருத்து. எனவே நீ இந்நூலைப் பாடியதால் எதைப்பெற உள்ளாய் என்கின்றனர். கந்தசாமி சுவாமிகள் (அது இறைவன் திருவருட் சம்மதமாகவல்லவோ இருக்கிறது என்பதாம்.) 7

## சற்குருமுன்னர் வேண்டுகோள்

நீருண் டுயர்கண் மணியாண்டு,உள்
ளன்பில் நிறைந்தளவில்
நாருண்டுர் உண்மை யநுபூதி
ஞானநன் னோன்பரொ(டு)உன்

நூறாண்டு பேணும் எமைத்தண்ட
பாணி.கண் ணோக்கி அருட்
பேறாண்டு பல்லா யிரக்காண்டு
வாழ்வுறப் பெய்யரோ.

வி-ம். நீறு ஆண்டு-திருநீற்றினைத் திருமேனி முற்றும் நிறையப் பூசி, கண்மணி ஆண்டு-உருத்திராக்கமாலையணிந்து. நூல் தாண்டும் உண்மையநுபூதி-சாத்திரங்கற்ற அளவில் அமையாமல் மேற்பட்ட அநுபவ அறிவை. ஞான நன்நேயரொடு-அமையப்பெற்ற உனது தவவிரதருடன்கூடி, நூறாண்டு பேணும் எமை-உமது அவதார நூற்றாண்டுவிழாவைக்கொண்டாடும்எங்களை, தண்டபாணி-தண்டபாணிப் பேருள்ள சற்குருநாதரே, கண்நோக்கி-கடைக்கண் பார்ந்து, அருட்பேறு ஆண்டு-உமது திருவருட் செல்வத்தைப்பெற்று, பலகாலம் வாழப் புரிவீராக என்பதாம்.

இந்த எட்டுப் பாடல்கள் - யமகம்-திரிபு-என்ற வகையிலிருப்பதால் விளக்கம் எழுதவேண்டியதாயிற்று. இத்தகைய பாடல் கந்தசாமி சுவாமிகட்கு மிக எளிது. 8

திருவாமாத்தூர் - கௌமார மடாலயம்
தவத்திரு. சந்தப்புலமை, தி. மு. செந்திநாயக சுவாமிகளியற்றியன.

வெண்பா

தண்டமணி கைமுருக தாசகுர வன்பெருமை
கொண்டவர்பிள் ளைத்தமிழ்நூல் கூறினால்-கண்டமனப்
பேரன்(பு) அமையுமனப் பேரன்முரு கத்தாசப்
பேரன் பதிகசுகப் பேறு.

கட்டளைக்கலித்துறை

வாசம் பெறுமுடற் பேரனென் றிங்கு வளர்முருக
தாசன் கவித்தண்ட பாணிநற் பிள்ளைத் தமிழ்ப்பனுவல்
நேசம் பொலிஉளத் தன்பா லுரைத்தல், நிகழ்சகள
மாசம் பவநிலைப் பாகுங்கௌ மார மகிமையதே.

ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் திருமடத்தன்பரான
இராதாபுரம்-நடுக்கப்பத்தம், திரு இலட்சுமிநாராயணரெட்டியார்
அவர்கள் இயற்றியது.

வெண்பா

முன்முருக தாசர் முதுபுகழ்ப்பிள் ளைத்தமிழ்நூல்
பின்முருக தாசரன்பிற் பேசினரால்—மென்முளரிப்

பூவினிரு மாதர்தரு போகமயின் றின்னருட்சீர்
மேவிடச்செய் வான்குரவன் மெய்.

**பூவின்-தாமரைப் பூவிலுள்ள, இரு மாதர் - திருமகள் - கலைமகளென்பவரின், செல்வமும் கல்வியும்.**

சிரவணபுரம் - கௌமார மடாலயத்தலைவர்,
**தவத்திரு. சுந்தர சுவாமிகளவர்கள் இயற்றியன.**

**அறுசீர்விருத்தங்கள்**

பூமகள் வதன மென்னப் பொலிவுறீத் திருவி ளேங்கத்
தேமலி கயிலை நீத்துச் சிவன்உமை சேயோ டேய்ந்து
மாமணி மகுடஞ் சூடி வாழ்ந்தசீர்ப் பாண்டி வண்சீர்
நாமக ளருள்சேர் வேத மாமுனி நவின்றான் மாதோ. 1

அத்தகைப் பெருமை வாய்ந்த அணிகிளர் பாண்டி நாட்டின்
முத்தமிழ்ப் பொதியை மேவு முனிகரக் கமண்ட லத்தில்
வைத்திழிந் தாழி நோக்கி வண்குண திசையின் ஏகிச்
சித்தர்கள் நிதங்கொண் டாடும் செம்புமா நதியோன் றம்மா. 2

ஆயநன் நதியின் மேலாம் அணிவளத் துறைய னேகம்
தூயநற் பெயர்கொள் சிந்து பூந்துறைப் பக்க மாக
மேயத்தில் இலிங்க மாக விளங்கரன் பெருமை தோய்ந்த
சேயநன் நகர மாகுந் திருநெல்லைப் பதியதாமால். 3

அத்திரு நெல்லை தன்னில் அவிர்சைவ வேளா ளப்பேர்
உத்தமக் குலத்தின் மேலாம் உயர்குடிப் பிறப்பில் வந்தோன்
சத்தொடு சித்தா னந்தத் தனியொளிப் பிழம்பாய்ந் தோன்றிப்
பத்தருக் கருள்வான், தண்ட பாணியாங் குரவனம்மா. 4

மெய்க்கலை முருக தாச முனியெனும் வேழ*மீந்து
பொய்க்கநோய் தவிர்ந்த சந்தப்புலவனை செந்தி றைதப்
பைத்தநல் இரசந் தன்னிற் பாங்குற விளைந்தாற் போன்ற
வித்தகக் கட்டி யாவான் மேதகு முருக தாசன், 5

பாட்டனைர் பேரே யன்றிப் பாமழை முகில்அன் னேன்போதல்
தேட்டரும் பாட்டுப் பேரும் செறிந்தசெம் புலமைச் சீரோன்

---

*ஈந்த – பெறப்பட்ட.

வீட்டிடும் அகந்தை யில்லான், மேதகைச் சிரவை நாதன்
தாட்டுணை தலையிற் சூடும் தனிப்பெருந் தவப்பே ராளன்.6

இப்பெருந் தகையோன் மாதை ஏய்சந்தப் பாட்ட னுக்குள்
ஒப்பரும் அழகோர் பத்தும் உற்றிடப் பிள்ளைப் பாட்டைத்
தப்பறு சுதை,தேன் முப்பாற் றகைக்கனி கைக்க வுண்டு
திப்பியக் கவிஞர் உள்ளம் தெவிட்டிடச் செப்பி னானே. 7

வண்ணவான் சரப மாக வருதண்ட பாணி யென்னும்
அண்ணலின் எழுபத்தொன்பா னைங்கரு பூசை யோடு
நண்ணருட் கும்ப நீர்பெய் நாளின்நன் மலரா யிங்கார்
எண்ணருங் முருக தாசர் இன்புடன் வாழ்க மாதோ

திருப்பேரூர்-சாந்தலிங்க சுவாமிகள் திருமடம் தலைவர்
தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளவர்கள் இயற்றியன-

பாண்டிநா டதனில் நெல்லைப் பதியிலோர் சேயாய்த் தோன்றி
ஆண்டிரு நான்கிற் செவ்வேள் அருளிறைக் கலைகள் தேர்ந்து
காண்டகு புலவர் போற்றக் கணக்கிலா வண்ணம் பாடி
ஈண்டெமை யாண்ட எங்கள் இறைவனும் தண்ட பாணி. 1

திருப்புகழ் முருக தாசன் திகழ்முழு நீற ணிந்தோன்
விருப்புடன் அக்கம் காவி மேனியேன் தண்டம் கையில்
உருப்படத் தாங்கி மாதை யூரினிற் கோயில் கொண்டோன்
தருப்புல வோர்கள் போற்றும் தவமுனி இவனும் அம்மா. 2

கொலைசெயா விரதம் யாரும் கொளவிழை சுரவன் மீது
சிலையின்மீ தெழுத்தே போன்று திகழ்ந்திடும் பிள்ளைப் பாவைக்
கலையுணர் சுரவன் றந்த கான்முனை செந்தி லாதன்
தலைமகன் முருக தாசன் சாற்றிநற் றவம்பெற் றானே. 3

திருவளர் மாதை யூரிற் றிருப்புகழ்த் தண்ட பாணிக்
குருபரன் முருக தாசக் குரிசில்எண் வண்ணக் கோமான்
தருசெந்தில் நாய கன்றன் தனயனு முருக தாசன்
பெருமைசேர் சுரவன் றாலப் பிறப்பினிற் பேரனுமே. 4

*நங்குர வனுக்குப் பிள்ளை நறுந்தமிழ்க் கவிகள் நூறும்
பங்குறப் பருவம் பத்தாய்ப் பகர்ந்தரங் கேற்றும் சீர்க்குக்
கொங்குறு சிரவை வாழ்சற் குரவன்சேய் கந்தசாமி
பொங்குள மகிழ்ந்து சாற்றும் புகழ்க்கவி போதும் மாதோ. 5

எந்தமக் கினிய நண்பும் ஏற்றநற் றுணையு மாகும்
தொந்தமார் முருக தாசத் தூயமா தவனு ரன்பால்
தந்தஇப் பிள்ளைப் பாடல் தனையுணர் அன்பர் யாரும்
சந்தமார் தண்ட பாணி தன்னருள் பெறுவா ரன்றே.

சிரவணபுரம் - கௌமார மடாலயம்
தவத்திரு. அரங்கமுத்து சுவாமிகள் அவர்கள் இயற்றியன.

கள்ளைப் பழித்ததமிழ்க் காப்பியங்கள் பன்னூறு
கொள்ளைகொளத் தந்த குருபரனைப்—பிள்ளைத்
தமிழ்க் கவியில் ஏத்தித் தவமுருக தாசன்
அமிழ்தச் சுவை காட்டினான்.

மாதைத் தவப்பயனும் வண்ணச் சரபரடிப்
போதைத் துதித்துப் புகழ்பாடி—மேதை
முருகதாசன் இந்நாள் மொழிசேய்த் தமிழால்
உருகாதார் உள்ளம் உவர்.

சிரவணபுரம் கௌமார மடாலயம்
தவத்திரு. மருதாசல சுவாமிகள் (தம்பிசாமி) அவர்கள் இயற்றியது.

சந்தவண் ணச்சரபத் தண்டபா ணிக்குருவைப்
பந்தமுடன் பிள்ளையெனப் பாவித்துச்—சொந்தஅவர்
பேரனார் பாடினார் பிள்ளைத் தமிழ்ஒப்பு அக்
கீரனார் பாடலுக் கே.

சிரவை-ஆதீனக் கவிஞர், திரு. புலவர், ப. வெ நாகராசன் அவர்கள்

சந்தச் சரபனும் தேசிகன் றன்னைத் தவமுகின்ற
சொந்தக் குழவியாய்ப் போற்றித் தமிழாற் றுதித்தளித்தான்
கந்தக் கடம்பன் மலர்த்தாட் பணியிற் கனிப்புடையும்
முந்தப் புலமை முருகதா சப்பேர் முனிவரனே.

---

*இக்கவி இந்நூலாசிரியருக்குப் பாராட்டுக் கூறியதுடன், சிறப்பாகச் சாத்துக்கவி வழங்கிய தவத்திரு கந்தசாமி சுவாமிகள் பாடலையும் பாராட்டியுளது.

**கோவை–விளாங்குறிச்சி–புலவர், அருள்மிகு, தண்டபாணி சுவாமிகளைக் கனவிற்கண்டு அருள்பெற்ற அன்பர், வி. நா. மருதாசலக்கவுண்டர், இயற்றியன**

வெண்பாக்கள்

முதுமா தவஞான மோனகவு மாரன்
பொதுமா சமயன் புராரி—யதுமாதைச்
சந்தச் சரபகுரு தண்டபா ணிக்கு(உ)கந்து
தந்தனனோர் யின்ளைத் தமிழ். 1

அன்னவன்றான் ஆறென்னில் அப்பாட் டிடைத்தலைவன்
மன்னருளாம் சுந்தரர்மை மைந்தனையர்—சொன்னயப்பா
வாய்ந்தசெந்தி லையகன்சேய் வண்முருக தாசகவி
தோய்ந்திருமை வாழி சுகத்து. 2

குலத்தொழில் கல்லாமற் உடியதால் யாப்புப்
புலத்தொழிலும் கௌமார பூசை—நலத்தொழிலும்
கொண்டவிரு மெய்ப்பேரன் கோதில்பிள்ளைப் பாட்டு
தண்டபா ணித்தாத் தனுக்கு. [ரைத்தான். 3

சுவைஆறும் தொண்டைமட்டே, தோத்தரிப்போர் நெஞ்
சுவையாகும் அன்பென்றுந் தோயும்—சுவையேற்றி [சிற்
னன்முருக தாசனவன் நற்றெண்டு கொண்டருள்க
மன்முருக தாச மகாள். 4

பூமாலை சாத்திப் புகழ்ந்து. தண்ட பாணியனைப்
பாமாலை சாத்திப் பணிபயனை—பூமாலைக்
கண்ணர் கொலைபுலைஞர் காணார்;கண் டுய்வர்பத்தித்
திண்ணர் தியானத் தினர்.

சைவமுத லான சமயமெலாம்விளங்கும்
தெய்வ அருளே தடித்துத் தேசிகனை—உய்விளிக்கும்
ஞான தண்ட பாணி நறிய.புகழ் ஏத்தவரும்
வானவரும் வெள்கருட்சீர் வாழ்வு. 6

எழுசீர் விருத்தம்

மலைதொறு மருவும் முருகவேள் இருமை
வரமலி உரமொலி சந்தத்
தலைபெறு தமிழ்வாய்க் கிளியெனு மாதைத்
தண்டபா ணிக்குரு பரன்மேல்

விலையறு பிள்ளைக் கவிப்பிர பந்தம்
விளம்பிமெய் யிசையினில் உயர்ந்தான்
நிலைகவு மார நெறியினன் முருக
தாசனும் நிபுணபா வலனே. 7

கட்டளைக்கலித்துறை

தந்தையா ரெப்படி, மைந்தனு ரப்படித் தானெனும்சொல்
நிந்தையா காமலும், விந்தைபோ காமலும், நீடுநிற்பான்
தந்தையா குஞ்செந்தி னுயகன், தாத்தன் தண் டக்காள்போற்
சந்தயாப் பின்கலப் போங்குபிள் ளைக்கவி சாற்றினனே. 8

சந்தக்கவி—எண்சீர்

தனன தானதன—தய்யத் தனனு

பெருகு பாலுததி—நள்ளச் சுவைதோய்
பெருமை நீடியல்கொள்—செய்யுட் டொகையே
உருக லாதசிலை—உள்ளப் புலையோர்
உயர்வும் ஆர்கருணை—வெள்ளச் சுகமே
குருவை யேபரம—தெய்வத் தினிலே
குறிகொ ளாதபத—மையத் தெளிவே
முருக தாசகவி—விள்ளற் புதமாம்
முருக தாசகுரு—பிள்ளைத் தமிழே. 8

---

திருநெல்வேலியையடுத்த - கோபாலசமுத்திரம்
ச. ஆறுமுகம் பிள்ளையவர்கள் இயற்றியது.

தந்தாதன தானன தனதன தானத்
தந்தனு தனனதன தன்னத்
தனன தனதன தானந் தந்த—
தந்தனத் தந்தனு தய்யத் தனனு.

கம்பிரவி நாயகன், அரி, சிவன், வேலைத்
தன்கையு டணிகுமரன், வெம்மைக்
கதிரொ(டு) உமையெனும் ஆறுந் தங்கள்
பண்பினுக் கன்புசேர் உள்ளத் தினிலே

கண்டார்பெற மேவிய திருவுரு வாகச்
செஞ்சொல்சேர் ஒருகுரவன், வண்மைக்
கனவ டிவமும்மெய் ஆகுஞ் சண்டை—
வம்பெனத் தொண்டர்பால் விள்ளக் குருவாய்

பம்பினர்கள் மாள்வகை ஒருநெறி தேடத்
தண்டபா ணியன்எனுமோர் வண்ணப்
பரம குருபர நாதன், தந்த
செந்தமிழ்ப் பொங்கமார் செல்வச் சுதனூர்

பம்பாநதி ஓடிடும் உயரிய மாதைச்
செந்திரு யகரருளும், உண்மைப்
படியு ணரும்அறி வாலுஞ் செஞ்சொல்
உண்டவற் கன்பிலே தெய்வத் தமிழா

கும்,பாநய மேவிடு புலமைகொள் ஆர்வச்
சிந்தைசேர் மகனெனஇம் மண்ணிற்
குலவி டுமுருக தாசன் சந்த—
வண்கவிச் சிங்கமாய் வெல்லத் தினிலார்

கொள்சேர்சுவை மாமண மிகுமொழி யாகத்
தந்தன எனஅலகில் வண்ணக்
குவைபல் விதவித மாகுஞ் சந்தம்
மிஞ்சிடப் பைம்பொனேர் மெய்யுற் றிடவே

சம்பாமுதல் நாடிய விளையும்நெல் வேலித்
தந்தையார் அயில்முருகன் உண்மைத்
தவக ருணைவர லாறுங் கொண்ட
கந்தனுக் கின்பமாய், உய்யத் துணையாய்

தண்பாரத பூமியில் நறுமண மேவத்
தந்ததால் அகமகிழ்வ ருண்மைத்
தமிழ றிஞரென வாகும் பொங்கும்
மங்களச் சங்கமார் பிள்ளைத் தமிழே.

வெண்பா

*செந்தமிழ்க்கு வாய்த்த திருப்புகழோன் சிந்தைமகிழ்*
*பைந்தமிழ்ப்பிள் ளைப்பாப் பகர்ந்திட்டான்—வந்தஅவன்*
*தண்ணருட்சீர் சார்முருக தாசனெனும் பேரனுயர்*
*விண்ணமுது நேர்சுவையாம் மெய்.*



பாட்டுடைத் தலைவர் :
வண்ணச்சரபம்
அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்.

உ

குருவே துணை.



## அருள்மிகு. வண்ணைச்சரபம் - தண்டபாணி சுவாமிகள்

# பிள்ளைத்தமிழ்.

---

### பாயிரம்.

**கெம்பீர விநாயகர் துதி.**

*தண்டபாணி சுவாமிகள் திருக்கோவிலில் வழிபாட்டுக்குரிய கணபதிக்கு சுவாமிகள் சூட்டிய பெயர்.*

திருவருள்வி லாசமுறு சிவன்,உமையொ டங்கொரு
தினத்தில்உய் யானம் ஒன்றிற்
சேர்ந்திட,அவ் வேலையொரு மண்டபத் திற்சத்தி
சிவபிரண வம்பு ணர்ந்தே
மருவுற,நன் மதகரியின் வடிவுகொடு வருசுதனை,
மாதைநக ரிற்கௌ மார
மடமேவு கெம்பீர கணநாத னைத்தினம்
மனந்தனில் நினைந்து பணிவாம்;
வெருள்செய்புலி அதள்,அரவு, சமி,இதழி வடிவென்உமை
மிளிரும்வலம் ஒன்றி, அன்பர்
விழைவன தரும்பரமர் கழைவனம்எ னுந்திருநெல்
வேலியினில் ஆலிமுகிலிற்
பெருகிடியெ னப்பலரும் உருகிடுதமிழ்க்கவிகள்
பேசவரு தேசி கனதாம்
பிள்ளைத்தமிழ்க்கவிதை கொள்ளைத் தவத்தகை
பிறங்குபுசி றந்தொ ளிரவே.

விளக்கம்: கயிலையங்கிரியின் சார்பில் உள்ள நந்தவனமொன்றில், சிவனும் உமையும் சென்றபோது, அங்குள்ள அழகிய மண்டபமொன்றில், சத்தி-சிவப்பிரணவங்கள் இவரது முன் தோன்றின. அவை இரண்டும் ஆணும் பெண்ணுமான யானைவடிவுற்றன. ஒன்று கூடின. அப்போது கணபதிப்பெருமான் அவதரித்தனரென்பது வரலாறு.

"பிடியதன் உருவுமை கொள மிகு கரியது—வடிகொடு தனதடி வழிபடு மவரிடர் கடிகணபதிவர அருளினன்" என்பது தேவாரம். பிடி-பெண் யானை, கரி-ஆண் யானை, உய்யானம்-பூஞ்சோலை மதகரி-மத யானை, புலி அதள்-புலித்தோலாடை, சமி-வன்னியிலை, இதழி-கொன்றைமலர். வடிவு-என்பது திருநெல்வேலியின் அம்மன் பெயர். காந்திமதியென்பது மற்றொன்று. அங்கு அம்பிகை இறைவனுக்கு வலப்புறமாய் இருப்பதாகும் (பாண்டிநாட்டிலெங்கும் அவ்வாறே யிருக்கும்) கழைவனம்-மூங்கிற்காடு, திருநெல்வேலியில், மூங்கில் முளைக்கீழ், சிவ வடிவம் இருந்ததென்பது தல வரலாறு. ஆலி முகில்-நீருண்டமேகம், அது மழை பொழிவது. கைமாறு கருதாமலும் மக்கள் நலம்பெறவுமேயாகும் அதுபோல, தடையில்லாமல் மிகுதியாகத் தமிழ்க் கவிகளைப் பாடும்பொருட்டு அவதரித்தவர் சுவாமிகள்.

மழைபெய்யுங்கால் இடிப்பதுபோல இல்லாமல், கோடைக்கால இடிபோல அதிரும்படி பாடுவதென்பது சிறப்பு. அத்தகைய சந்தப் பாக்களைப் பாடுவர். இடியோசை வெறும் அதிர்ச்சிமட்டுமே. சந்தப் பாக்கள் ஒலி அவ்வாறிருப்பினும், கேட்பவர் மனம் அன்பில் உருகுமென்பது சிறப்பு. தேசிகன்-குருநாதர் அவருக்குரிய இந்தப் பிள்ளைத்தமிழ் பாடுவதனால் மிக்க தவம் கைகூடிச் சிறக்கும்பொருட்டு, வணங்குகின்றேனென்பதாம். 1

சிறப்புக்குரு துதி—சந்தக்கவி.

தந்த தானன தய்யத் தனதன—தத்ததானா.

விந்த மாகிரி ஜதிற் றனையுக—விட்டமோனம்
விந்தை தோய்முனி, துய்மைக் கலைகொள் தி—றந்திரா
னந்த மாதவ வள்ளற் குருசர—ணத்தைநாபோன் [மா
நம்பி நாடொறுமுள் ளிற் கருதிவ—ழுத்துவேனே
செந்த வாதர நல்லிற் பனர்பர—வக்கலாவோர்
சிம்புள் நேர்பவன். நெல்லைப் பதியினு—தித்துமாணர்
சந்த மாதையில் மெய்யற் பகவடி—வத்தொடோவாழ்
தண்ட பாணிகொள் பிள்ளைக் கவிதை—தழைக்குமாறே

வி-ம். வான்வரை வளர்ந்த விந்த மலையைத் தன் கையினால் பூமியுள் மறையச் செய்தவர் அகத்தியர். அவர் கலாமிசமாக அவதரித்தவர், அருள்திரு. இராமானந்த சுவாமிகள். அவரது திருவடிகளை வணங்குவேன் என்பதாம். (இந்நூலாசிரியருக்கு இவர் உபதேச குரு என்க) செம்தவ ஆதர நல்விற்பனர் – சீவகருணையுடன் தவச்சிறப்புமுடைய அன்பர். சிம்புள்–சரபப்பறவை. சந்தம் பாடுவதில் இதை ஒப்பாவர். சரபம் எட்டுக்கால்களையும், சிங்கத்தைப் பற்றிச் செல்லும் வலிமையுமுடையது. அதுபோல, எட்டுவிதச் சந்தமுடைய வண்ணம் பாடுவதிலும், ஆணவப் புலவரடங்கவெற்றிபெறுவதிலும் வல்லவராயினர் தண்டபாணி சுவாமிகள் என்பதாம். 2

## கலைமகள் துதி.

கம்பன்முதற் பலபுலவர் வாக்கில் நின்று
பலநலமும் கவினச் செய்து
வம்பர்களும் பணிந்தேத்தும் புகழ்விளக்கும்
பொருங்கருணை வாணித் தாயே
உம்பர்மகத் தழலிடை ஊன் உணலும்இழி(வு)
எனுங்குரவன், உபய பாதச்
செம்பதுமத்(து) அமைதருபிள் ளைத்தமிழ்நூல்
சிறக்கஅருள் செய்கு வாயே.

வி-ம். உம்பர்-தேவர்கள், இவர்கள் மகிழ்வதற்காகக் கொலைவேள்வி செய்வதும் அவர்கள் ஊன் அவியை ஏற்றுக்கொள்வதும் தாழ்வே என்ற அளவில், சீவகருணை மிகுந்தவராவார் தண்டபாணி சுவாமிகள். எனவே உலகில் வாழும் மக்களாவார், எத்தகையரேயாயினும், அவர்களைச் சீவகருணைச் செந்நெறியிற் சேரச்செய்வதுயே தன் கொள்கையாயிருந்தவர் அவர். அவரது திருவடியிற் சூடும் மாட்சிபெறுவது இந்நூல்.

கம்பர், காளமேகப்புலவர், ஒட்டக்கூத்தர், ஔவையார் முதலியோர் கலைமகளருளால் தமிழ்க் கவிகள் பாடிச்செய்த அருளாடல்கள் மிகப்பல அவற்றையெல்லாம் ஈண்டுக் கூறவேண்டாவாம். எவருமறிந்த செயல்களாகும். 3

## கௌமாரர் துதி.

பரிதி,சிவன், சக்தி,நெடுமாயன், யாரும்
பரவுகண பதி, முருகன் என்னக் கூறும்
அரியசமயப்பொருளாய், இன்னும் பல்வா(று)
அறைபவர்க்கும் அவ்விதமாய் அவிர்ந்து, தன்னை(த்து)

உரியநிலை சிதருநற் பரமே, போற்றும்
உயர்குருஎன் றிடுந்திறத்தில் உறுதி தோயும்
பெரியகவு மாரர்பொற்றாள் மனத்தில் நாடிப்
பிழையறப்போற் றிந்தினமும் பேணி உய்வாம்.

வி–ம் மேலே கூறிய ஆறுசமயக் கடவுளராயும், அப்பாற்பட்ட பொதுப் பொருளாயுமுள்ள பரம்பொருள் வடிவமே குரு. என்ற உறுதியுடன் அநுபவமுடையவர்கள் பெரிய கௌமாரர் ஆவர் மற்றும், ஒவ்வொரு சமயக் கடவுள் நெறியை உபதேசிப்பவர் சமய குரவராவர் முருக வழிபாட்டினைப் புராண முறையிற்கொண்டு வழிபடுவோர் கவுமாரர்கள். பொதுவாகச் சகள வழிபாடு செய்பவர் யாவரும் கௌமாரர் என்ற கௌமார நிலை படிப்படி உயர்ந்து விளங்கும் அவ்விவரத்தைக் கௌமார நூற்களிற் கண்டறிக—யாரும் என்றது ஒவ்வொரு சமயத்தோரும். பெயர் வேறு வேறு கூறி வழிபடுவார்கள் என்பதாம் வைணவர் சூர்பிக்கை ஆழ்வார் சேனை முதலி-என்பது போல—

அவையடக்கம்.

கிள்ளைத் திருமுனி, பிள்ளைப் படிவாய்க்கு கேசன் மிசை
கொள்ளைத் துதிபகர் உள்ளச் சரபக் குரபரன்மேற்
பிள்ளைத் தமிழொன்று வெள்ளைச்சொல் கொண்டன்பிற் [பேசலுற்றேன்
தள்ளைத் தயையினர் எள்ளற்செய் யார்,உண்மைச் [சார்பறிந்தே.

வி–ம். கிள்ளைத் திருமுனி-கிளிவடிவாயுள்ள அருணகிரிநாதர், அவரது மறு அவதாரம் தண்டபாணி சுவாமிகள் என்பதைப் "பிள்ளைப் படிவாய்" என்பதாலறியலாம். சரபக்குரு என்பது முன்னர்க் கூறப்பட்டது. வெள்ளைச்சொல்-பிள்ளைத் தன்மையில் உடையயான் கூறுதல் கருத்துச் செறிவற்றவெண் சொல்லாற் கூறுவது பிள்ளைத்தமிழ் என்பதும் ஆம். தள்ளை-தாய் அன்புடைய பெரியோர். பிள்ளைமொழியென்றுகொண்டு உவப்பார் வெறுப்படையார் என்க. எள்ளல் - இகழ்தல்.

குறிப்பு: இந்தப் பிள்ளைத்தமிழ் நூலின் காப்புப் பருவத்தில் ஒவ்வொரு கவியின் முற்பகுதியில், எடுத்துக்கொண்ட தெய்வத் துதியும், பிற்பகுதியில் சுவாமிகள் வரலாறும் விளக்கப்பட்டுள்ளது. சந்தக் கவிச் சரபமான சுவாமிகள்பற்றிய பாட்டானதால், சந்தப் பாடலே மிகுதியாய் இருப்பதும், வரலாறுகள் பலரறியாதிருப்பதால் விளக்கி எழுதப்பட்டிருப்பதும், சந்தக்கவியில் வரலாறு அமைந்து சந்தத்துக்கேற்பச் சொல்லும் பொருளும் சேர்ந்திருப்பதும் படிப்பவர்கட்கு இனிமை தருவதாகும். அன்பர்கள்கண்டு மகிழ வேண்டுகிறேன்

## நூல் - முதலாவது

## காப்புப் பருவம்

பாட்டுடைத் தலைவனைப் பிள்ளைப்பருவமுடையவனாகப் பாடும் இந்த நூல் முறைக்கேற்ப, இன்னின்ன கடவுள் காக்கக்கடவரெனப் பாடுவதாம். காத்தலுக்குரிய கடவுள் திருமாலானதுபற்றி, முதலாவதாகத் திருமால் காக்கவேண்டுவதாகக் கூறுவது மரபு.

### 1. திருமால்

திருமா துறையும் மணிமார்பும்,
தேவர் பணியும் திருத்தாளும்
செய்ய கனக மணிப்பணியும்,
சேடப் பணியுங் கொண்டு, தமிழ்ப்
பெருமா மறைசொற் றுயர்குருகூர்ப்
பெரியோன் முதலாம் அன்பருள்ளிற்
பிறங்கும் பெருமாள் இருசரணப்
பிரசம் அன்பாற் பரசிடுவாம்,
திருவாழ் அரங்கற்(கு) ஆயிரமும்,
சீரார் அனந்தைக்(கு) யமகமதும்,
திருவல் லிக்கே ணிக்கெழுகூற்
றிருக்கை ஆதி யனவும் விண்டு
வருசீர் முருக தாரனையர்
வண்ணச் சரபன், திருப்புகழோன்
வரமார் தண்ட பாணிமுனி
வரனைத் தினமும் புரப்பதற்கே.

வி-ம் கனகமணிப்பணி-பொன்னும் இரத்தினமும் கூடிய ஆபரண வகைகள், சேடன் என்ற பாம்பு சேடப்பணி, குருகூர்ப்பெரியோன்-சடகோபாழ்வார் முதலாம் அன்பர்-பிற ஆழ்வார்கள் பிரசம்-தேனையுடைய தாமரைபோன்ற திருவடிகள், பரசுதல்-துதிசெய்தல், துதிப்பதன் காரணம் என்னெனில்? திருமகளுடன் கூடிய திருவரங்கப்பெருமாட்கு ஆயிரம் பாடல், திருவனந்தபுரத்திருமாற்கு, யமக அந்தாதி, திருவல்லிக்கேணிப் பார்த்தசாரதிக்கு எழுகூற்றிருக்கை மற்றும் பல தலங்களில் உள்ள திருமால் துதிசெய்து, ஏழாயிரப் பிரபந்தத்தில், நூறு பதிகம் (ஆயிரம் பாடல்) இப்படிப் பாடியவரான, சுவாமிகள், மூன்று பெயரினையுடையவர் என்பதை விளக்கி, அவரைக் காக்கவேண்டி என்பதாம்.

## 2. பரமசிவன் – சந்தம் 16 கலை

**தானத் தனத்தந்த – தானனத் தாத்தன**

கூனற் பிறைத்துண்டு–மாகத் கணிக்கங்கை
கூடச் சடைக்கண்கொள்–வார்,மெயிற் போர்த்த
கோடுற்ற மைக்கம்ப–வேழத் தினிற்கொண்ட [தோல்
கோலப் புயப்பொங்க–நாதர்,இக் கேற்கும்வேள்
கோதைத் துணைக்கொண்டோர்–பூவுய்த் திடப்பொங்கு
கோபத் தழற்கண்கொள்–பார்வையிற் றீய்த்தகோ,
கூர்மைத் தகைத்துங்கம்–ஆர்சக் கரத்தின்பு
கூர்பொற்ப டற்செங்கண்–மாயனுக் காக்குவார், ¼

ஏனத்தின் மற்கொம்பு–கூர்மப்ப றக்தென்பொடு)
ஈமத்தில் நட்டஞ்செய்–வார்,பணிக் கூட்டமே
ஏலத் தரித்தம்பை–பாதக் கரத்தின்கொள்
ஏறார் றணிக்கொண்டர்–காணமுற் றேற்றுவார்,
ஏமற்குள் அர்ச்சங்கொள்–சேய்நற் பதத்தென்றும்
ஏனுற் றிடக்கண்ட–மாணாநுட் சீர்த்தியார்
ஏமத் தனிக்குன்று–சாபத் தினிற்கொண்ட
ஈசற் குலப்பொன்று மாறுமிக் கேத்துவாம். ½

தானக் களிற்றின்கு–மாம்அற் புதக்தென்றல்
சார்வெற் பின்நற்செம்பு–மாநதித் தீர்த்தமார்
சாலிப் பதிக்கண்கு–லாய்மெய்த் தவத்தன்பர்
சாருந் தவத்துங்க–னேயெனச் சாற்றுசீர்
சாலத் தழைத் தொண்செய்–கீள்,செக் கரிற்றங்கு
தானைச் சிறப்புங்கொள்–சாமியைப், பாக்குழு
தாலுச் சொலிப்பொன்று–தீயிற், புனற்கண்பெய்
தானைத், தவத்தந்த–மேனியுற் றுற்றலால் ¾

வானத் தர்நத்தும்பல்–மேன்மைச் சை லத்தன்று
வாடிக் குகற்சிங்கை–நாடிமுற் காக்கநீ
வா! இத் தினத்தின்றெ–னைவிட் டிடிற்சொந்த
மாம்மெய்ச் சிதைப்பன்பொ–யேனைத் தாட்டியாய்
மார்புற் றுருட்டந்த–நாளிற் சலித்தங்கம்
மாள்வுற் றிடற்கின்றி–வேலன் உற் றுட்கொள்சீ
மானைப் பசுக்கொண்செய்–கோடுற் றிடத்தந்த
மாதைப் பதித்தண்ட பாணியைக் காக்கவே 1

வி-ம். வளைந்த மூன்றாம் பிறைச் சந்திரனையும், ஆகாய கங்கையையும் கூடும்படியுள்ள சடையுள்ளவரும், திருமேனியிலணிந்த தோற்போர்வையைக் கொம்புடன் இருண்ட நிறமுள்ளதும் அசைவதுமான யானையினிடம் உரித்தணிந்த திருமேனியினரும், மன்மதனுவான் இரதியுடன் சென்று தாமரை மலரைக் கணையாக ஏவிய போது, சினந்து நெருப்புக்கண்ணாற் பார்த்துச் சாம்பலாக்கிய சிவபிரானும்,

பன்றியின் வலிய பற்கொம்பு, ஆமையின் முதுகெலும்பான ஒடு அணிந்து, ஈமத்தில் மயானத்திலாடுபவரும் — நாகங்களின் கூட்டத்தை கை-மார்பு-முதலிய இடங்களிற்கொண்டு, உமையொருபங்கில் விளங்கும்படி, பலமுள்ள இடப வாகனத்தில் அமர்ந்து, அன்பர் முன் காட்சி தருபவரும், எமனுக்கு அஞ்சிய மார்க்கண்டர், என்றும் அழியாத பதவியில் அமையும்படிசெய்த சிறப்புடையவரும், பொன் மலையான மேருவை வில்லாகக்கொண்டவருமான பரமசிவனுக்கு, உவப்பு-மனமகிழும்படி, தோத்திரம் புரிவேன் ஏனெனில்-

வானத்தர் நத்தும் பல மேன்மைச் சிறப்புள்ள, திருமலையினிடத்து, மனம் நொந்து-மனதில் தியானித்து, என் கண்ணெதிரிற் காட்சி உதவிக் காக்கும்படி வரவேண்டும், இல்லையானால், எனது உடலை மாய்ப்பேன் இதிற் சோர்வடையேன் என்பதாக மனவுறுதியோடு பூமியில் படுத்தபடியே உடலை மலைமீதிருந்து பூமி நோக்கி உருட்டிய அந்த வேளையில், மனம் வாடுமாறு, உடல் இறந்துவிடாதபடி — முருகன் தோன்றாத் துணையாயிருந்து காக்கப்பெற்ற திருவுருவாளன் என்ற பெயருடையவர். மேலும் அவர்,

மதமிக்க யானையின் கூட்டம், இனிய தென்றற்காற்று, பொருந்திய பொதியை மலையிலிருந்து வருகின்ற தாம்பிரபாணி ஆற்றின் பக்கம் உள்ள, திருநெல்வேலிப் பதியிற்றோன்றியவர். உண்மையடியவர்கள் கிளிவடிவான அருணகிரிநாதரின் மறு பிறப்பு என்று கூறும்படி விளங்கியவர், வெள்ளை நிறமான, லங்கோடு கௌபீனமும், செந்நிறமான கல்லாடையுமணிந்த, துறவுடையவர், தான் பாடிய பாடலமைந்த ஏட்டுச் சுவடிகளை, பல தீநாக்குடைய நெருப்பிலும், பல நீர் நிலைகளிலும், இட்டு அழித்த தீரமுடையவர்—அத்தகைய தண்டபாணி சுவாமிகளைக் காப்பதற்காக என்பதாம். 2

## 3. உமையவள் — சந்தம்

தானதன தத்ததன — தனனத் தனத்தனா.

*பாரதிசி வத்தகம—லாதனம்வெ கித்ததிரு*
*பாதால ரிற்பணிசெய்—திடும்நற்சி றப்பினள்*
*பாசம்ஓர்தொ றட்டிபுனை—வாள், தனதி சைப்பனுவல்*
*பாடியத மிழ்ப்புலவன்-உயஅத்தி னத்திலே*

பாசமலி வுற்றமக-ளாகி அமு தட்டுதவு
பாரகரு ணைக்குவை யொய்-தியசத் தியத்தினள்,
பார்தனையொ ருத்தபரி-போ திரமொ னக்கொள்சிவை,
பார்வதி,ஓர் பச்சையயில்-எனவுற்ற பொற்பினள், ¼

சாரதியெ னத்திறல்கொள்-பேடிரதம் முற்கடவு
சாமளநி றத்தரிதன்-உடனுற்ற சத்தி,மா
சாதுரிய மிக்கஅபி-ராமனென உற்றபெயர்
சாருமொரு பத்தன்அர-செதிர்சொற்றல் முற்றவே
சாதனைசெ யக்குழையை-வீசிமதி யைத்தரும்உ
தாரமலி வுற்றபரை-அரனுக்கி டத்தினள்
தாதுகும லர்க்குழலி-னள்,உலகி னைப்பெறுமொர்
தாய்,உமைது ணைச்சரண மலர்கட்ப ழிச்சுவாம். ½

ஆரதிசெய்(து) அற்பொடுகை-மீதயில்பி டித்துமிகும்
ஆலயமு டைப்பல்பதி-செலும்இட்ட னைப்,பலோர்.
ஆவல்செய்தி ருப்புகழ்க-ளானகவி சொற்றவனை,
ஆனிதவிர் ஐப்பசியின்-வதுவைத்தி னத்திலே
ஆழியரு கிற்றளிகு-லாவியப தித்தலைவன்
ஆனபெயர் பெற்றொருவன்-இருகட்பு னற்பெயா
ஆகுலம்ஒ ழித்தியென-நாடுபொழு திற்சொல்மொழி
யால்அறுமு கற்பரவி-அருள்பெற்ற தத்தையே ¾

வாரதிகம் உற்றகழை-தோய்வளந கர்க்கண்வரு
மாசுதனை, எட்டுவய-தினில்அற்பு தத்ததாம்
வாழியத மிழ்க்கவிசொல்-சீலனை,எ ழிற்பொதியை
மால்வரையி னிற்சுரவன்-அருள்சற்கு ணத்தினல்
மாநிமை கட்குவகை-சேர்தவம்இ யற்றுநனை.
மான்முகமு டைச்சபரி-கதிபெற்ற பெற்றியால்
வானவருர் நத்தவளர்-கோயில்வள மிக்கிலகும்
மாதைநக ரிற்சரப-சரவற்பு ரக்கவே. 1

வி - ம். பாரதி - கலைமகள். கமல ஆதனம் - தாமரைப்பூவின் இருப்பு. திரு - இலக்குமி. இவ்விருவரும் பணிசெய்யும் சிறப்புடைய வளும், பாசம் - தொறட்டியென்ற அங்குசம் இரண்டையும் ஏந்திய வளும். வடமொழியில் சங்கரமுனிவர் பாடிய, சவுந்தரியலகரி நூலை, இனிய தமிழிற் பாடிய கவிராச பண்டிதருக்காக. அவர் காசிக்குப் போய்த் திரும்பும்வரை அவரது மகள் வடிவில் ஆறுமாதம் கூட

னிருந்து சோறு சமைத்து உதவியவளும், உலகைச் சுமக்கும் ஆதி சேடனைத் தன் சுண்டுவிரல் மோதிரமாயணிந்தவளும், பச்சைமயில் போன்ற நிறமும் சாயலுமுடையவளும், தேர்ப்பாகனாகி அருச்சுனனுக்குத் தேர் செலுத்திய திருமாலின் தங்கையும், அரிய அபிராமி யந்தாதி பாடி வழிபட்ட அபிராமப்பட்டர், தன்னை மறந்த நிலையிலிருந்த சமயம் அரசன்முன், அமாவாசையன்று முழு மதிய நாளென்று கூறியதால், அரசன் கூறிய கடுமொழிக்கஞ்சி, துதி செய்தபோது தனது காதிலிருந்த ஒரு குண்டலத்தைக் கழற்றிக் கீழ்த்திசையில் வீசி, முழுநிலவை வரச்செய்தவளும், சிவனது இடப் பாகமுடையவளும், பூவின் மணமிக்க கூந்தலினளும், உலகெல்லாம் பெற்ற தாயுமான உமையவளது திருவடிகளைப் போற்றுவேன். ஏன் எனில்—

தினமும் முருகனை வேல்மூலம் வழிபாடுசெய்து, வேலைக் கையிற் கொண்டு நகர்தோறும் சென்று துதிப்பாடல் பாடும் விருப்பமும், பலரும் விரும்புகின்ற திருப்புகழ்ப் பாடலியற்றும் புலமையும், குற்றமற்ற ஐப்பசி மாதத்தில் திருநெல்வேலிப் பதியில் காந்திமதியம்மை தவமிருந்து இறைவனைத் திருமணம் பெறுவதான விழா நாளில், செந்தில்நாயகமென்ற அன்பர் மகப்பேறு வேண்டி, வணங்கிய போது, வருந்தாதே விரும்பியவாறு மகப்பேறு உண்டாகப்பெறுவா யென்று அம்மை கூறிய அருளுரைப்படி பிறந்த தவமும், அருணகிரி நாதரது அம்சம் பெற்ற சிறப்பும், பெற்றுவந்தவரும்,

தமது எட்டு வயதுப் பருவத்திலேயே புதிய பாடல் பாடியவரும்' பொதிகை சென்று உலகநலம் கருதித் தவமியற்றியவரும், மான் முகம்பெற்றுத் தவம்புரிந்த சபரி, முத்திபெற்ற திருவாமாத்தூரில் விளங்கும் வண்ணச்சரபமென்ற பெயரினருமான குருநாதனைக் காப்பதற்காக என்பதாம்—

பணி—ஆதிசேடனை பார்ப்பு, [illegible]—அருச்சுனன், அருதலம் - துயரம், வதுவை-திருமணம், தத்தை - கிளியான அருணகிரிநாதர், வார்- நீளம்.

## விநாயகர் – சந்தக்கலி

தந்தத் தனத்ததன – தனதன தனத்தன

தந்தத் தினைக்கொடொர்சி—லைபிற் கதைப்பொலிவு
    தங்கப் பொறித்தகண—பதியை.விழை வற்றநான்
சொந்தத் தமிழ்க்கிழவி— இன்பத் திருக்கயிலை
    துன்றத் துதிக்கைதொடு—முதல்வனை வழுத்துவாம்

கந்தப் பரற்குரிமை-பொங்கக் கவித்திரள்கள்
கண்டிற் சிறக்கநிதம்- நுவல்பவனை, மெத்தவே
சந்தப் பசுக்கள்உயர்- கொம்புற் றநற்பதிகொள்
தண்டக் கரச்சரப-குரவற்புரக் கவே.

வி-ம். கையில் உள்ள தந்தத்தை எழுத்தாணியாக்கொண்டு, மேருமலையின்மீது வியாசர் கூறிய பாரதக் கதையை எழுதியரும், அன்புடன் தமிழ் மொழியில் 'சீதக்களப' என்ற அகவலைப் பாடிப் பரவியமைக்காக ஔவையைக் கயிலையில் தும்பிக்கையால் எடுத்து விட்டவருமான கணபதியைத் துதிக்கின்றேன். ஏன் எனில்

கந்தப்பெருமானுக்குரிய தமிழ்க் கவிகளை கற்கண்டினும்மேலாக இனிமைதருமாறு பாடியவரும், பசுக்கள் வழிபட்டுக் கொம்புபெற்ற மாதைப்பதியில், தண்டபாணி சுவாமிகளைக் காப்பதற்காக, என்பதாம்— 4

## முருகக்கடவுள் - சந்தம்

தனதான தனனதன - தானனத் தாத்தன

அணிநீடு கயிலைமலை-அரனார்செய் தவமௌனவின்
ணவர்யாரும் உறு துயரம்-மாய்வுறத் தீக்கணால்
அருள்ஆறு பொறியும்மக-வுருவாகி ஒருவடிவில்
அமைவாகி வருகுமர-வேளினைக், காட்டினா(டு)
அதிதாகம் நிலவுகிழ-முனியாய்ஓர் குறமகளை
அணிவாவி யருகில்,மத-யானையைக் காட்டியே
அணைவானை, அருணையினில்-ஒருதூணில் முனிவனெதிர்
அவிர்வானை, அவுணர்குல-காலனைச், சுட்டொடே $\frac{1}{4}$

வெணிலாவை நிகரும்நிறம்-உறவாசு மிசைஒலிசெய்
மிகுவீர முறுகுருகு-ளானை,மெய்க் காட்சிஓ
வியமானும் வடிவுடைய-உமையாள்தன் மடியின்மிசை
விளையாடும் இளையவனை-வாரியிற் றேற்றம்நீர்
மிகைஓர்கை யிடைசுறுக-நுகர்வான்முன் ஒருமொழியின்
வியனீடு பொருள்சொல்குரு-நாதனைப் பாச்சொல்
வினையாவும் நசிய-அருள்-குகவேளை, ஒருபதினொண் [illegible]ரொர்
விழியானை அனுதினமும்-ஓகையிற் போற்றுவேன் $\frac{1}{2}$

மணிநாடு மனிதவுரு-வுடையார்கள் எவரும் உயிர்
வதை,கோறல் புலையுணவு-வாய்தல்அற்(று) எற்றமாம்

*திரமீதில் அடியார்பதர்—உதிர்தூளி யுடலின்மிசை*
*செறிவாக, உவரியிடை—வீழ்நினைப் பேறுகவே*
*செயவேள்ஒர் நிசமவிர் கல்—செயலால்உள் அமைதிபெறு*
*திறலானை, இசைகொள் இம—வான் இலிற் றேற்றுதாய்*
*சிவனார்தம் எதிரில்அருள்—மலிகோயில் கொடுநிலவு*
*திருமாதை வருமுருக—தாசனைக் காக்கவே.*

**வி-ம்.** அழகிய கயிலைமலையில், சிவபிரான் தவப்பயனாகவும், தேவர்கள் துயரம் தீர்வதற்காகவும், அவரது தீக்கண்களில் ஆறு பொறியாய்த் தோன்றியும், பின் ஆறு மகவாகியும், உமையவளால் ஒரு வடிவாகவும்பெற்ற குமரப்பெருமானும், தினைப்புனத்தில் வள்ளி நாயகிமுன் கிழ வடிவுகாட்டித் தண்ணீர் வேட்கையுடையதாகக்கூறி, யானையை வரச்செய்து அச்சுறுத்தியணைந்தவனும், திருவருணையி லிருந்த அருணகிரிநாதர்பொருட்டு, தூணொன்றிற் காட்சி தந்தவனும், சிரசில் செந்நிறமான கொண்டையுடன், வெண்ணிறமான சேவலை தோளிற்கொடியாயுடையவனும், உமையவள் மடியில் விளையாடும் குழந்தைப்பெருமானும், கடல்நீரினைக் குறுகும்படி செய்து உண்ட அகத்தியர் அறிய உபதேசித்தவனும், அன்பர் வினை தீர்ப்பவனும்,[1] பதினெட்டுத் திருக்கண்ணுடையவனுமான முருகப்பெருமானை வணங்குவேன். ஏன் எனில்

இவ்வுலகில், மனிதராகப் பிறந்தார் யாவரும், உயிர்வதைத்தல்-கொல்லல், ஊனுண்ணல் இல்லாத கருணையைப் புரியுமுன், வீடு பேற்றினைத் திருவருள் தந்தாலும் பெறமாட்டேன் இதுண்மையென்று கூறியவாயுடையவரும், மழைபோலப் பயன் கருதாமலும், அளவின்றியும் பாடிய கருணையுள்ளவரும். சிரவைப்பதியில் தோன்றிய இராமானந்த சுவாமிகளுக்குச் சற்குருநாதனும். திருச்செந்தூரிற்சென்று பல பாடல் கூறி முருகனருள்வேண்டிய சமயம் எண்ணியபடி காட்சி கிடையாமையால், பாடலமைந்த ஏடுகளை உருவி விட்டுப் கண்டம் வெறிபாட்டு வேல் இவற்றைக் கடலில் வீசியும், திருநீற்றுப் பையினைக் கிழித்தெறிந்தும், அடியவர் பாததூளியே

கூட்டமுறு தானவரை-மாய்க்குமுயர் வீறு,சுடர்
கூர்த்தமுனை தோயவொளிர்-சீர்த்திதோய் அயிலே!
கூப்பியகை யோடுநனி-போற்றருணை நாதமுனி
கூப்பிடமுன் வேளொடவிர்-மாச்சிகாவளமே!
வாட்டமகல் வீரமொடு-கூக்குவென ஓலமிடும்
வாட்குநிகர் வாய்உகிர்கொள்-போர்பதாயுதமே!
வார்க்குமது ஆர்புதிய-பூக்கள்பல தூவிநிதம்
வாய்த்ததுதி கூறிஉமை-ஏத்துவேன் நிசமே
ஓட்டம்அகல் வாதல்,குவி-வேற்றல்,இரு வாறுகவி
ஊற்றுமலை வீழ்அருவி-போற்சொல்வாயனையே
ஊர்ச்சமதி மேனிகொடு-சேட்டமதி வீடுபுகும்
ஊற்றமுறு தேசிகனை-வாழ்த்துவார் பெறவே
கேட்டல்உடனேயுதவும்-வேட்கையனை, நீடுபல
கேத்திரமெலாவும்நுவல்-பாட்டுளானை,ஒர்
கேட்டுவினை ஆனினர்உறா-ச்சுகம்அவாவிமுயல்
கீர்த்தியனை மாதையிலை-காப்பீர்நாடோறுமே.

வி-ம். அசுரக்கூட்டத்தை அழிக்கும் வெற்றிமிக்க, கூரியமுனையுடன் ஒளியுடைய சிறந்த வேலாயுதமே! குவித்தகையுடன் வேண்டிய அருணகிரிநாதர் காண, முருகப்பெருமானைக் கொண்டுவந்த மயில் வாகனமே! சோர்வின்றி, வீரமுடன் வெற்றியொலியொடு கூவுதலையும், வாள்போற் கூரிய நகத்தாற் போரிடுவதையும் கொண்ட சேவற்கொடியே உங்களை புதிய மலர்களால் அருச்சித்து வழிபடுகின்றேன். ஏன் எனில்

உதடுகள் விரிந்தபடிக்கும் (இதழகலந்தாதி). உதடுகள் குவிந்தபடிக்கும் [குவிபாஒருபது] இருவாறு-ஒட்டியும் விரிந்தும்படிக்கும் கவிகளை யோசியாமல், மலையின் அருவிபோலப் பல பாடல் கூறும் வாயுடையாரும், ஊர்ச்சமதி-கார்த்திகை மாதத்தில் மேனிகொடு-பிறந்தும். சேட்டமதி-ஆனி மாதத்தில், வீடுபுகும்-வீடுபேறு எய்தி

யும் சிறப்புப்பெற்ற குருநாதரும், அடியவர் பெறும்படி உடனே அருள் புரிபவரும், எல்லாத் தலக்கடவுளரையும் துதித்த சமரச அநுபவத்தரும், வலிய மிருகங்களால், கேட்டுவினை-அழிவை, ஆனினம்-பசுக்கூட்டங்கள்பெருமல் நலம்பெறத் தவமியற்றிய கருணைநிறைந்த தண்டபாணிக் குழந்தையைத் தினமும் காப்பீராக! என்பதாம்.

அடிகளின், தோற்றத்துக்கும், வீடுபேற்றுக்கும் உரிய, கார்த்திகை-ஆனி மாதங்கட்கேற்ற-ஊர்ச்சமதி-சேட்டமதி என்பதும், தலமென்பதற்குரிய க்ஷேத்திரம் என்ற வடசொல், கேத்திரமென்றிருப்பதும், திருவருளாற் சேர்க்கப்பட்டவை என்பது மனமறிந்தவுண்மை-முன்னரே திட்டமிட்டு அமைத்தவையன்று. 6

வேலுமயிலுந்துணை, எனவும், சேவலங்கொடியே செயம், எனவும், தன் ஏட்டுச்சுவடியில் சுவாமிகள் எழுதியுள்ளனர். எனவே இந்த மூன்றுக்கும் இணைத்துத் துதிகூறவேண்டியது சிறப்பாயிற்று. சிகாவளம்-மயில், பதாயுதம்-கால் நகங்களை ஆயுதமாகக்கொண்ட சிறப்பால், பத ஆயுதம்-பதாயுதமென்றாயிற்று, சேவற்குரிய பெயர் நகாயுதமென்றும், காலாயுதமென்பதும் உண்டு. காலாயுதம் என்பது கந்தரலங்காரம் கவி (86)

## திருமகள்-கலைமகள் - சந்தம்

### தனனதனத் தனனதனத் தனனதனத்-தாத்தன

பொருவில்சிவப் பொடுதவளப் புதுவனசப்-பூக்கணே
புரவலர்நற் புலவர்களிப் பொலிவுறவுற்-றேத்துவார்
திருவருள்பொற் றுலகர்மதித் திடல்புரிநட்-பேற்றுவாழ்
திருமகள்,சொற் கலைமகள்,பொற் திருவடிகட்-போற்றுவாம்
அருமறையிற் சொலினும்மகத் தவியிடல்பொய்க்-கூற்றதாம்
அரன்முதல்மூத் தவரெதிர்த்(து) அறையினும்ஒப்-பாப்பிரான்
இருமைதவிர்த் தொளிர்தவர்நத் திடுவர் அடியர்க்-கேற்றமாம்
இனியதிருப் புகழ்நுவல்பெட் பிசைமுனியைக்-காக்கவே.

வி-ர். செம்மையும் வெண்மையுமான தாமரைப்பூவில் வசிப்பவராய் அரசர்களும் புலவர்களும் மகிழும்படி உலகர் மதிக்கும் வாழ்வு தரத்தக்க செல்வம்-கல்விகட்கு உரியவர்களான, திருமகளையும் கலைமகளையும் வணங்குவேன், ஏன் எனில்

வேதத்திற் கூறியிருப்பினும், பிரமன், விட்டுணு - உருத்திரன் என்பவர் நேரே வந்து கூறினும், உயிர்க்கொலை செய்தல் கூடாதென்ற தீரமுடைய பெருமானும், இம்மை, மறுமையென்ற இரு

வகைப் பிறப்பையும் தவிர்க்கும் தவமுடையவர்கட்கு உரிய திருப் புகழ்ப் பாக்கள் பரடுபவருமான தவமுனிவரைக் காப்பதற்காக என்பதாம்,

தவளம்-வெண்மை, வனசம்-தாமரை, அவி-வேள்வியில் ஊன் இடுதல். 7

### வள்ளிநாயகி – சந்தம்

*தனதான தந்ததன – தய்யனத் தாத்தன*

துயர்யாவும் வென்றசிவ-முனி,மான்மெய் கண்டுள்நகை
துதைகார ணங்கொடுரு-எய்திமற் றோட்கனே
தொகையாய மைந்தகரு-வனவேடர் பின்.பசுமை
தொகும்ஏனல் ஒன்றுபரண்-வைகிமொய்க் கோற்கண்
வெயர்வாட இங்கிதநல்-உரையோடு வண்புள்கிளி [மேல்
வெருவாஅ கன்றிடல்செய்-கையளைச் சூர்க்கொல்
மிகும்ஆவல் கொண்டுபணி-வுறவாள் இரங்கி அவன் [வேள்
விறலார்பு யந்தழுவும்-வள்ளியைப் போற்றுவாம்
உயர்வாவி னங்குதிரு-மலைமீது ருண்டபொழு(து)
உடல்ஊனம் இன்றெனினும்-ஒல் இடத் தோட்கனே
உறுகாயம் ஒன்றுசில-தினம்ஆற லின்றியுற
ஒருநாளில் வெண்பொடிகை-மல்கஉட் டோற்றியே
அயர்(வு)ஒவ நன்குநுத-லொடுவாயில், நொந்தபுணில்
அருளால்இ டுந்தயைகொள்-பிள்ளையைப்பாக்களால்
அவன்சீர்பு தன்றவனை,வயல்மாதை யம்பதியில்
அவிர்ஞான தண்டம்அணி-கையனைக் காக்கவே.

வி–ம். தவசீலரான சிவ முனிவரது கண் பார்வையாற் கரு வுற்ற மான் வயிற்றிற் பிறந்தவள் வள்ளிநாயகி. ஏழு அண்ணன்மா ரான வேடர்களின் தங்கையாக வளர்ந்தவள். தினைப்புனங் காவல் செய்திருந்தபோது சூரனைக்கொன்ற முருகன் விரும்பியபடி திருமண மேற்றவள், அந்த அம்மையை வணங்குவேன்.

உயரத்திலும் சிறப்பிலும் மேலான திருமலைமீகிருந்து முருக னருளைப்பெறவேண்டிப் பூமிநோக்கி உருண்டு உயிர்விட முயன்றனர் தண்டபாணி சுவாமிகள். அக்கால் முருகனருளால் காக்கப்பட்ட னர் இடது தோளில் மட்டும் கல் உராய்வினால் சிறு காயமேற்பட் டது ஒருநாள் வள்ளித்தாய் மனவெளியிற்றோன்றி, புண்ணின்மீது தன் கரத்தால் பச்சிலைச்சாந்து பூசி, நீறணிந்து, வாயிலுமிட்டு,

நெற்றியிற்பூசி மறைந்தனள் இது விபரம் சுவாமிகளியற்றிய "குரு பர தத்துவ நூலில்" விபரமாயறியலாம். தாயன்புடையாள் வள்ளி நாயகி எனவே அவளது பிள்ளையை என்று பாடலிற் கூறப்பட்டுள்ளது வள்ளித்தாய்க்குப் பிள்ளைத்தமிழ், பதிகம் பிறவும் பாடியுள்ளனர். எனவே காக்கக் கடமையுடையாள் என்பதாம்.

## தெய்வயானையம்மை – சந்தம்

தாத்தனத் தனனதன–தத்தாத் தனனு

நாற்கரத் தவள இபம்–வேட்கையிற் கொடுஉதவ
நாட்டமிக சுறும்அரிம–ளைப்பாற் சுதையாய்
வேற்கரத் தொடுகலபி–ஏற்றசிற் பரகுமர
வேட்கிடத் துறைபிடிம–கட்போற் றிடுவாம்
ஆற்கண்உற்(று) அயன்மகர்மெய்–நாட்டுறப் புரிபரமன்
ஆக்களுக் கருள்பதி,ந– தீக்கீழ்க் கரைபோய்
மேற்கரைக் தளியெனல்மெய்–ஆக்குசொற் றொடை–கொள்
வேத்திரக் கரமுனிவ–ளைக்காத் திடவே. [நகர்

வி–ம். இந்திரன் ஐராவத யானை நான்கு துதிக்கையுடையது. வெண்ணிறமானது. அது கண்டு கொண்டுவந்து இந்திரனால் வளர்க்கப்பெற்றவள் தெய்வயானையம்மை. பின் முருகப்பெருமானால் மணக்கப்பெற்று அவன் இடப்புறமிருப்பவள். அந்த அம்மையை வணங்குவேன்.

ஆற்கண்-கல்லாலின் கீழிருந்து, பிரமன் மக்கள் நால்வருக்கு உண்மை ஞானமருளிய சிவபிரான், பசுக்களுக்கருள்செய்து திருவாமாத்தூரில் எழுத்தருளியுள்ளான் அவ்வூரில் உள்ள ஆறு பம்பை. அது, முன்னாளில் மேற்கிலிருந்து கோயிலுக்கு இடப்புறமாக ஓடி-கீழ்க்கரையில் கோயிலாக இருத்தது இரட்டைப்புலவர் கலம்பக நூல் பாடிவந்து. அன்று அச்சுதனென்ற பல்லவ மன்னன்முன் அரங்கேற்றினர் ஒரு பாடலில். வலப்புறமாக ஓடிய மேற்கரைக் கோயிலெனப் பாடிவிட்டனர். பலர் இயல்புக்குரிய மாறுபாட்டை வினவினர் நாமும் அறியோம் அவளும் பொய் கூறாள் என்றோதினர் அன்றிரவு பெருமழைபெய்து அவர் பாடலின்படியே சென்றது. இன்றும் அவ்வாறேயுள்ளது என்ற தவச்சிறப்பை விளக்கி, அத்தகைய திருவாமாத்தூரிலுள்ளவர் தண்டபாணி சுவாமிகள். அவரைக் காக்க என்பதாம்

தளி-கோயில், வேத்திரம்-பிரம்பு, இது தண்டத்தைக் குறிப்பிட்டுள்ளது மற்றும் விரைம் தலபுராணத்திலறிக. புலவர் புராணத்தில், இரட்டைப்புலவர் சருக்கத்தும் காணலாம். 9

## பொதுத்தெய்வம்-அடியவர்

கொல்லாத நெறிகொண்டு, புலை இஞ்சை மருவா
கொள்கையிற் சரத ராஜேர்,
குல(வு)அறுவ கைச்சமய மூர்த்திமுத லாகக்
குறிக்கின்ற நாம ரூபம்
எல்லாமும் ஆர்அருட் சல்லாபம் உறுபொருளை,
இனியநீ(று) அக்க மணிபூண்(டு)
எழில்கொள்கல் லாடைபுனை மெய்யடியர் தாட்
எஞ்சலற அஞ்சலி செய்வாம் [டுணையை
செல்லார் பொழிற்செந்தில் ஆதியா கக்குலவு
சீர்கொள்படை வீடா றினைத்
திகழ்ஒன் றி னுக்காற தாகமுப் பத்தாறு
செப்பினனை, மாதை யூரில்
பல்லாயி ரந்தொண்ட ருக்(கு)ஆ றெழுத்துமுற்
பகர்மறைஉ ரைத்து மேலாம்
பத்திநெறி புத்தியிடை நந்திடவு ரைத்திடும்
பண்பனைக் காக்க என்றே

வி-ம். பொதுவான பரம்பொருள், உயர்ந்தனவும், தாழ்ந்தனவுமான பல சமயங்களில் நின்று, அவரவர் தகுதிக்கேற்பப் பயனை வழங்கும். ஆனால் கொல்லல்-புலால் உண்ணல், உயிர்களை வதைத்தல் என்ற தீமையில்லாத சத்திய விரதமுடையோர் வழிபட இருப்பது, சௌர 'முதலான ஆறு சமயங்களேயாம். அதையல்லாமல் உள்ள பொதுச்சமயம். ஆக எழு வகையில் விளங்குவது பரம்பொருள். அதையும்.

திருநீறு-அக்கமணிமாலை-கல்லாடை பூண்டு, மேலே கூறப்பட்ட அறுசமய வழிபாட்டினையுடைய மெய்யடியவரையும் வணங்குவேன். இந்தவாறுள்ள ஏழு சமய வழிபாட்டினை மேற்கொண்டவராய்ப் பல்லாயிரம் பாடலியற்றியவரும், திருச்செந்தூர் முதலான முருகன் தலமாயுள்ள ஆறுபடை வீடுகள் ஒவ்வொன்றுக்கும் ஆறுக முப்பத்தாறு படைவீடுகளை வகைப்படுத்திப் பதிகமும், திருப்புகழும் பாடியவரும் திருவாமாத்தூரில் தங்கியிருந்தபோது வழிபடுவோர் விரும்பியவாறு ஆறெழுத்து, ஐந்தெழுத்து, நான்கெழுத்து, மூன்றெழுத்து, எட்டெழுத்து மூலமந்திரங்களை உபதேசித்து, அந்தாட்டில் விடாமல் வழிபாட்டு நெறியையும் பலருக்குக் கூறியருளியவருமான, தண்டபாணி சுவாமிகளைக் காத்திடுக என்பதாம். 10

காப்புப்பருவம் முற்றிற்று.

ஆகக் கவி—10.

# 2. செங்கீரைப் பருவம்

இது செங்கீரைத்தண்டின் இளஞ்செடி - தலையசைந்தாடுவது போலுமென்பர். கவிழ்ந்து தவழும் பருவம். தலைதூக்கியும், கீழ்வீழ்ந்தும் உள்ள நிலையைக் குறிக்கும் அன்றி-செம்மையான, கீர்-மழலைச் சொல், பேசத்துவக்கும் பருவமென்பதுமுண்டு 2-க்குமேல் 5-வது மாதத்தில் நிகழ்வதென்பர் ஆடுதல்-அசைதலுக்கும், பேசுதற்கும் உரிய சொல்-உரையாடினான் ஊடாடினான் என்பது பேசிப்பழகுதல் எனப்படும்.

இக்கவி-தாய் தந்தையர், மகப்பேறு வேண்டித் தவமிருத்தலும், அம்மையின் அருளால் பிறத்தலும் சிவபிரான் திருநீறு தரப்பெற்றுப் பெயரிடுதலும்-பேசுதலும்பற்றிய செய்தி கூறுகலாம் பிறந்தவுடன் அழாதிருந்தனர் என்பது வரலாறு முற்பிறப்பில் அருணகிரி நாதராயிருந்த நிலைக்கு. இப்பிறப்பு எய்தியதென்ற சிந்தனையாலென்று கூறினாரார் சுவாமிகள் இதனைத் தகவலாகச் சொன்னவர், மகனான-தி. மு செந்திநாயக சுவாமிகளாவர்

*தெண்ணீர்வ வர்பொருநை திருநெல்லை யூரினிற்*
*றிகழும்வே ளாள மகிபன்*
*செந்திநா யகபூபன், மூன்றுமனை மார்வதுவை*
*செய்தும், மக வின்றி உள்ளம்*
*புண்ணீர்மை யாய்ப்பேச்சு முத்தைநான் காகப்*
*பொருந்தியுர் வருந்தி யுறுகால்,*
*போற்றுமுயர் காந்திமதி சாற்றுமொழி யாற்றவம்*
*பொலிகருவில் வந்து மகவாய்க்*
*கண்ணீர் விடுத்தழல் இலாதுறுதல் கண்டவர்*
*கவன்றிடத், தந்தை கனவிற்*
*கருணையரன் நீலச் செவந்திமலர் வெண்ணீறு*
*கனிவொடுத விச்சொல் மொழியால்*
*திண்ணீர்கொ ளச்சொல்சங் கரலிங்க! நாமனே*
*செங்கீரை யாடி யருளே*
*திருசிவை பாரைநகர் வருமுருக தாசகுரு!*
*செங்கீரை ஆடி யருளே.*

வி-ம். தாமிரபரணியாற்றருகிலுள்ள தலம் திருநெல்வேலி- சைவ வேளாள மரபினரான செந்திநாயகம்பிள்ளையென்பவர் மகப் பேறின்றி வருந்தினர். ஒன்றன்பின் ஒன்றாக மூன்று மணம் பெற்றார் கோள்நிலையறிந்தோர் கூறியபடி நான்காவதாகப் பேச்சு முத்தம்மையை மணந்தார். அவர் அவ்வூரிலுள்ள காந்திமதியம்மையின்

மீது அன்புடையவர். ஐப்பசி மாதத்தில் ஷை அம்மை தவமிருந்து, நெல்லையப்பரைத் திருமணம்பெறும் விழா நடைபெற்றது. அது சமயம் தன் குறை கூறி வேண்டினர்! அசரீரியாக. ஏன் வருத்தம்? ஒன்றென்ன இரண்டு மகவுண்டாகும் என்பதைக் கேட்டனர். திருநீறு பெற்று மனையாட்குதவினர். பின் கருவுற்று மகப்பேறு பெற்றனர்.

பிறந்த சேய் உலகியற்படி அழுதல் முதலியன இன்றி வாளா கிடந்தது. மாதர் பலரும் எப்படி இது பிழைக்குமென்றனர். தந்தை வினவி மிக வருந்தினர் அன்றிரவுக் கனவில் இறைவன் தோன்றி இதோ திருநீறு. செவந்திமலர் இகனையிட்டு என்பெயரான சங்கரலிங்கம் என்று அழைப்பாயாக. சேய் நலம்பெறுமென்றருளினர். விழித்தபோது அந்த இரண்டும் அவர் கையிலிருந்தன. இதைக் குருபர தத்துவ நூலில் சுவாமிகளே கூறுகின்றனர்.

பாலனெனத்திகழ் நாளிலெனக்கதன் பண்புப்பெயர் இடுமா(று)
ஆலமர் தெய்வமொழிந்ததும், நீலம தாகுஞ்செவந் திப்பூ
மாலையை யானென நல்கலும் சாக்கிரம் வந்தும் கிசும்மாண்பம்
சீலமிகப்பெறும் எந்தையும் உண்மையும் சிலரும் தெரிவாரே.

ஷை சிவதெரிசனக் சருக்கம்—கவி-7.

(தாய்தந்தையர். நான்காமாதம். திருச்செந்தூரிற் போய் வழிபாடு செய்து வேண்டுதல்)

செந்தமிழ்க் கலையினைக் தென்றலைக் தந்துயர்
சிறப்போங்கு பொதியை மலையின்
சிகரத்திருந்துபுவி நோக்கிஎந் நாளினும்
சிதையாது வருபொருநையின்
பைந்தண்மலி வொடுதெளிந் தோடுபுகு நீரிற்
படிந்திட முழுக்காட்டி, வெண்
பால்நிறவி பூதியொடு சிந்தூரக் திலகம்உயர்
பாலமிசை தீட்டி. இடையில்
சந்தமலி பொற்றுகில்புனைந்தவா சர்பெருகு
சந்தனமுமட்டி மிர்ந்த
சாரும்உரு மாமலை, திருச்செந்தில் வேலனிரு
சரணமிசை அரணமாக்கிச்
சிந்தனைசெய் தாய்தந்தை இன்புறவளர்ந்தவா!
செங்கீரை யாடி யருளே
திருநிலவு மாதைநகர் வருமுருக தாசகுரு!
செங்கீரை ஆடி யருளே.

வி-ம். பெற்ளேர் திருச்செந்தூரில் வழிபட்டனர், திருவுருமா மலேயென்ற, திருநெல்வேலியின் ஆற்றுநடுவுள்ள முருகன் சந்நிதியில் வழிபாட்ட விவரம். அதைக் குறுக்குத்துறையென்பதும் உண்டு. வருடம் ஒன்ருனதும், ஆண்டு நிறைவு என்று சிறப்புச்செய்வது பாண்டி நாட்டு மரபு.

தமிழும் தென்றலும் தோன்றிய மலே பொதியை, அதன் உச்சியிலிருந்து வருவது தாம்பிரபரணி ஆறு. அந்த ஆற்றுநீரில் முழுக்காட்டி, திருநீறு குங்குமம் நெற்றியிலணிந்தனர். சந்தனம் பூசினர் பொன்ஞைடை புனேந்தனர் முருகன் திருமுன் இட்டு இது உன் அடைக்கலம் என்று வேண்டினர் என்பதாம். திருச்செந்தூர்சென்ற விவரம் காண்க.

"ஈன்ற தந்தையும் தாயும்என் றன்னே நான் மதியில்
ஆன்ற செந்திலிற் கொண்டுபோய், அங்கமர் அயில்வேல்
தோன்றல் பால்இதுஉன் அடைக்கலப் பொருளெனச் சொல்லி
ஏன்ற தொண்டும்நன் கியற்றினர் என்கைகேட் டுள்ளேன்".

"என்னே ஒர்மக வாமெனப் பெற்றெடுத்தானும்
தென்னே சூழ்திருச் செந்திலான் பெயரினன்" (செந்திஞயகர்)

திருச்செந்தூர்ச் சருக்கம்—2, 3.

கொலேபற்றிவருவது பட்டு. எனவே சுவாமிகள் அதை வெறுப்பவர். ஆதலின் பொற்றுகில், பொன்ஞைடை என மேலே கூறப்பெற்றது. 2

## தந்தையின் மகிழ்ச்சி

அக்கமணி ஆட,அணி பொற்பணிகள் ஆட,வியன்
ஆர்ந்தகற் பணிகள் ஆட,
அவிர்உரத் திற்புனேம தாணியா டச்,சிகையில்
அண்ணுசூ ழியம்ஆ ட,மெய்ச்
சக்கவிரும் நெற்றியிற் சுட்டியா டப்,பெற்ற
தாயுளத்(து) உவகை யாடச்
சந்ததியி லாவிடில்நன் முத்திகிடை யாதெனச்
சாற்றல்பொது, இந்த வச்சேய்க்(கு)
ஒக்கவுறு மதலேமேல், அப்பேறு பெற்றநான்
உயர்வென்று தாதை அன்பால்
உறுகைக ளேப்புடைத் தாட,முன் பொதுவர்அனே
உண்ணுமால் கண்ணை நகைத்

திக்கறிய ஆடுதல்நி கர்க்கவிளை யாடும்நீ
செங்கீரை யாடி யருளே
திருநிலவு மாதைநகர் வருமுருக தாசகுரு !
செங்கீரை ஆடியருளே.

வி-ம். அக்கமணி-உருத்திராக்கம், மதாணி-பதக்கம், சூழியம்-சிரப்பணி, மெய்ச்சக்கு-உண்மையான ஞானக்கண் இருப்பது நெற்றி, மகப்பேறில்லாதவர்க்கு முக்தியில்லையென்து பொது விதி. "அறிவறிந்த மக்கட்பேறே பெறுமவற்றுள் உயர்வென்பர்" திருவள்ளுவர், புடைத்தல் என்பது, மகிழ்வினுற் கைகளைத் தட்டிக் கொளல் கரகோஷம் என்பர். கண்ணபிரான், பசுக்களைக் காத்தவன். தீயவரை அழித்து அன்பரைக் காத்தவன். அதுபோல சுவாமிகள் பசுக்காத்தலையே பெரிதும் விரும்பியும், தீயவரை ஒறுத்து, நல்லோரை வாழத் தவமியற்றியுமிருந்தனரென்பது குறிப்பு.

## நெல்லையின் தலச்சிறப்பு

நீண்டிலகு பாண்டில்முளை வேறொன்று தட்டுதலின்
நிறைபாற் குடம்சி தைதலால்
நிதானதை யழிக்கவன் கோடரி கொணர்ந்திட
நினைத்தும்உள் அயர்த்(து)ஓர் நாளில்
மூண்டிலகு கோபனைக் கோபன்அது கொடுவெட்ட
முளையின்அடி யூ(டு)இ லிங்க
மூர்த்திமறை வாயிருந்(து) அதுதாக்க லாற்செநீர்
முடுகிவர, அச்ச மிக்குத்
தோண்டியுணர் கால்அதைக் கண்டுபாற் கலசம்விழு
தூயசெயல் ஓர்ந்து பணியத்
தோன்றும்வேய் வனநாதர் ஏன்றுவளர் நெல்லையிற்
றுகளில்வண் ணச்ச ரடமாய்ச்
சேண்திகழும் வானவரும் மெச்சவரு தேசிகா !
செங்கீரை யாடி யருளே
தென்பாண்டி நாடனே ! திருமாதை யூரினிற்
செங்கீரை ஆடி யருளே.

வி-ம். பாண்டில்-மூங்கில், கோடரி-கோடாலி, கோபன்-யாதவன், செந்நீர் - இரத்தம், சேண் திகழும்-வானிலுள்ள வேய்வனநாதர் - திருநெல்வேலிச் சிவன் பெயர் - பாண்டிநாடன் என்றது, சுவாமிகள் அவதரித்தது திருநெல்வேலி, அது பாண்டிய நாடு என்பதாம்-பாட்டின் பொருள் தெளிவு.

## முதலாவதாகப் பாடல் பாடிய வரலாறு

கண்பாவு தோகைமயில் வாகனக் குகனைக்
கருத்திடை பொருத்தி, அன்பாற்
கவின்ஆறெழுத்தோதி, எட்டாண்டொ(டு)அரையெனக்
கழறுபரு வங்கொள் நாளில்
நண்பாவு றும்பெரிய தாய்வனர் சுரண்டைநகர்
நண்ணிஅவ் வூரினர் தொழும்
நற்பூமி காத்தாளென் அம்மைபெயர் வரும்வகைவி
னைவுபோ தவர்கள்உணர
வெண்பாவெ ன த்தருமு தற்கவியில் அவர்மனம்வி
யந்துபணி யுந்த கையினில்
வெண்பாற் கடற்கடைந் திடுபோதில் வருதீய
விடம்அரன் உண் வேலை அம்மை
திண்பாவும் உலகுயத் தடைசெய்செயல் விண்டநீ
செங்கீரை யாடி யருளே
தென்பாண்டி நாடனே திருமாதை யூரினிற்
செங்கீரை யாடி யருளே.

வி-ம். சுவாமிகளின் தந்தையார் ஆருவதாண்டில் மறைந்தனர். தந்தையின் நண்பரான சீதாராம நாய்க்கரென்பார், கணபதி மந்திரம் திருமகள் மந்திரம் ஓதி வழிபடச் செய்தனர். பின் ஆறெழுத்தையும் கூறினர். அதுமுதல் வேற் பூசையும் ஆறெழுத்துச் செபமும் செய்தனர். இது முன்னைய தவத்தொடர்பு. இருப்பினும் தாய். தன் தமக்கை கணவர்பால் ஒப்புவித்துக் கல்வி பயிற்ற எண்ணி, அவரிருக்கும் சுரண்டைக் கனுப்பினர். அங்கு வழிபாடு செய்து கல்வி கற்கலானார்.

அக்கால், அவ்வூரினர் கூடிப் பூமிகாத்தாளென்ற அம்மைக்கு விழா எடுத்தனர். சிறு வயதினரான இவர் அங்கு சென்றிருந்தார் வயது எட்டரை. தக்கார் சிலரிடம் அம்மையின் பெயர் வினவியறிய முயன்றனர். பெயர்க் காரணம் கேட்டனர். கூறுமளவுக்கு எவருமில்லை. ஆனால் சிலர் பரிகசித்தனர்-பலகூறினர். உடன் ஒருவெண்பா ஓதினர். அதில் அம்மைபெயர்க் காரணம் அமைந்திருந்தது.

திருப்பாற்கடலைக் கடைந்தபோது விடமெழுந்தது. தேவர் வேண்டுகோட்காக இறைவன் உண்ணலானார் - அருகிலிருந்த இறைவி அஞ்சினாள். உலக முதல்வனை இறைவின் விடத்தால் ஊறுபடின் உலகமுழுதும் அழியுமே என்ற தாய்ப்பண்பினால் கழுத்தைப் பிடித்தனள். விடம் அங்கேயே தங்கியது என்ற கருத்தை

யறிந்த பலரும் வியந்தனர். "அந்நாள் வயது எட்டரை எனக்கு" என்று ஆசிரிய சுவாமிகள் கூறுகின்றனர்.

முதலாவதாக வந்த பாடல் அமுதமென்ற மங்கலச் சொல்லாக, அகரத்தை முதலாகக்கொண்டு அமைந்தது திருவருட்செயல். இத் தகைய வரலாறு, முதற்பாவென்ற வெண்பாவில் ஏற்பட்டது சிறப்பு. பாடல் வருமாறு

"அமுதம் கடையு(ம்)நாள் ஆலம் வெடித்துத்
திமுதமெனத் தீயெரித்துச் சென்ற(து)— அமுதமெனத்
தீக்கடவுள் உண்டார் திருக்கண் டத்தைப்பிடித்துக்
காத்ததனாற் பூமிகாத் தாள்". என்பதாம்.

## வேறு

வன்பா ருெடுநாய் கழுகருந்தூன்—
மகிழ்ந்துண் பவர்நெஞ் சயர்வாட
மதிநேர் முகத்தில் வெயர்வாட,
வண்கா தினிற்குண் டலம்ஆடக்
கொன்பா வுரத்தில் மணியாடக்,
குலவும் சதங்கை யிடையாடக்
குவளை மலர்த்தார் அசைந்தாடக்,
குளிர்பொற் கழலிற் கழலாட
இன்பார் தண்டை சிலம்பாட,
எழிலார் பின்னற் குச்சாட
இந்த நிலத்துத் தொண்டர்பலர்க்
கினிய புகழ்க்கொள மாரநெறி
அன்பாற் றுலக்கு வேன்எனல்போல்
ஆடி யருளாய் செங்கீரை
அணிசேர் மாதைக் குருபரனே—
ஆடி யருளாய் செங்கீரை.

வி-ம். பாறு-பருந்து, உரம் மார்பு, குவளை மலர்மாலை - வேளா ளர்க்குரியது. இவர் அந்த மரபினர் என்பதாம். பின்னல்-சடை. 6

இவரிவர் ஆட, நீ ஆடுக எனல், தமிழாவலால் ஆடுவரென்பது கருத்து.

தேறு தமிழ்ப்பாட் டாம்அமுதம்
செழிக்கப் பருகல் கூடுமெனச்
செங்கேழ்ப் பரிதி ஏழ்துரகத்—
தேருர்ந் தாடத், தில்லைமுதற்

பேறு திகழ்பல் பதியில்விடைப்
பெருமான் ஆட, இடப்பாகப்
பிராட்டி யாட,அரவணையிற்
பெருமாள் ஆட,ப் பிரசமலர்
ஏறுந் திருமா தாட, ஐங்கை
எந்தை தொந்தி யசைந்தாட,
எங்குர் கொலேதீ தெனவாணி
இயர்பி யாட, மலேதோறும்
ஆறு முகத்தோன் கூத்தாட
ஆடி யருளாய் செங்கீரை
அணிசேர் பாதைக் குருபரனே
ஆடி யருளாய் செங்கீரை.

வி-ம். செங்கேழ்-செந்நிறம். துரகம்-குதிரை-இது பூட்டிய தேர் சூரியனது. விடைப்பெருமான்—இடபவாகனமுடைய சிவபிரான், அரவணை—பாம்புப்படுக்கை, பிரசமலர் – தாமரைப்பூ. வாணி-கலைமகள் முருகன் இவர்களெல்லாம் சுவாமிகளது பாடல் மிகவும் எய்துமென்ற மகிழ்வில் ஆடுவார் என்பதாம். சூரியனுக்கென்று ஏழாயிரப் பிரபந்தத்தில் ஆயிரம்—சூரிய மாலை முப்பது, தனிப்பதிகம் மூன்றுக்கு முப்பது பாடல் பாடியுள்ளார். இதுவரை இப்படிச் சூரியனுக்கு எவருமே பாடிலர். மற்றவை இதற்கு மேற்பட்டவை. 7

## வேறு – சந்தக்கவி

தானன தானன—தானன தானன – தந்தா தந்தான

தேடரி தாகிய வீடதில் மேவல்சி—றந்தார் கொண்டார்கள்
சீலம தாமலர் தூய்முரு கோனிசை—செந்தேன் என்றேபல
பாடலில் ஓதி,இர் மாநில மீதுப—தீந்தோர் இன்பூடு
பாவல்செய் தேகதி சேர்வன் என் வாய்மைப—
கர்ந்(து)ஆர் வந்தோயும்
ஈடமை வாய்!அமை தோய்வன மாநக ரின்பால் வந்தாய்!செய்
ஏதமெ ணாதடி யார்வழி பாடுள் இ—சைந்தா நந்தேவ!
சேடனும் நாடிலை தோய்வண்ண வாய்முகில் செங்கோ
செங்கீரை
சீதைபி ராண்சை தோய்திரு மாதைய—செங்கோ
செங்கீரை.

வி-ம். உலக நலம் கருதாமல், பலர் மேலான வீடுபேறடைந்தனர். முருகோனை பழிபட்டும, இனிய பாடலைப் பாடியும், இந்த வுல

கத்தினர் இன்பமேவச்செய்த பின்பேநான் வீட்டைவேன் என்று கூறியவரே! மூங்கில் வனமான திருநெல்வேலியில் அவதரித்தவரே. அடியவர் குற்றம் கருதாமல் ஆள்பவரே. ஆதிசேடனும் விசேடமாகப் போற்றும்வண்ணம் பாடும் வாயினரே சீதை கேள்வனை இராமன் போற்றிய திருஆமாத்தூரினரே செங்கீரை ஆடுக

பாவல்-பரவுதல் அமை-மூங்கில், ஏதம்-தவறு சேடன்-ஆதிசேடன், வண்ணம் என்ற சொல். சந்தம் நோக்கி, ணகரஒற்று தொக்கு வணமென்றாயிற்று. 8

தானன தந்தன-தானன தந்தன-தானன தந்தான

வாரண மென்றவிர் கேதனம் ஒன்றிய
வாகுஉ றுந்தேவன்
மாதயை கண்டிட நீடுசு ரண்டையில்
வாய்கன வின்பால்நல்
நாரண வுர்பல தேவமைந்திர
நாவன்மு னிந்தே,பை
நாகமு டன்குறள் ஆர்தல்பு ரிந்ததை
நாடிஉள் அஞ்சாமல்
நீரவி ருஞ்சடை யார்புதல் வன்பதம்
நேடிடவெண்சேவல்
நேரில்இ லங்கிள லாமும்வி ழுங்கிடும்
நீதியு ணர்ந்தாய்!பல்
ஆரணம் விண்ட(து)ஒ ரேபொருள் என்றவன்
ஆடுக செங்கீரை
ஆழம்வி ளங்(கு)அகழ் மாதையு வந்தவன்
ஆடுக செங்கீரை.

வி-ம். வாரணம்-சேவல். கேதனம்-கொடி. வாகு-தோள். நார் அணவும்-அன்புடைய. நாவன்-நாவினையுடைய மந்திரவாதி நாகம்-பெரிய பாம்பு. குறள்-பூதம். நேடிட – தியானித்தபோது, ஆரணம்-வேதம். ஒரேபொரு-கடவுள் ஒன்றெனல் அகழ்-நீர் நிலை.

சுரண்டையில் அடிகள் தங்கியிருந்த இளமைப் பருவத்தில், ஓர் நாள் முருகனருள் தம்மிடமிருப்பதை யறியவேண்டுமென எண்ணி உறங்கினர். கனவொன்று கண்டனர். நெல்லையின் நடுவே நாற்சந்தி யொன்றில் மந்திரவாதி வந்து தன்னை அளவறப் புகழ்ந்தான் அதுகண்ட சிறுவராகிய இவர், உன் ஆணவமான இச்சொல்லைப் பெரியோர் மதியார். என்னிடமே உன் வலிமையைக் காட்டு என்றனர். அவன் கோபங்கொண்டான் பெரிய கூடையைத் திறந்தான்

பெரிய பாம்போன்று வந்து இவரைத் தொடாமல் வட்டமிட்டது அஞ்சிலர். ஆறெழுத்தை உச்சரித்தனர். பாம்பு மேலெழுந்து நின்றது. பின் இவ்வளவுதானா இன்னும் உண்டா என்றனர். இதோ பார் என்று மற்றொரு கூடையைத் திறந்தான், மாடனென்ற தேவதை கைத்தடி ஒன்றுடன் வந்தது. சேவலைப் புகழ்ந்த பாட்டு ஒன்றோதினர் உடனே பெரிய வெண்சேவலொன்று வந்து எல்லாவற்றையும் விழுங்கி யேகிற்று என்பது கவியின் பொருள். விபரம் சுவாமிகளருளிய குருபரதத்துவம் பிரயோக விநோதச் சருக்கத்திலறிக— 9

## மந்திரவாதியை வெல்லுதல்

தந்தனதானா தந்தனதானா – தந்தா தந்தான.

சிந்திடை வேலே வஞ்சின
மேயாய்–செங்கோ செங்கீரை
சிங்களர் ஊர்போய் வன்கலம்
ஊர்வாய்–செங்கோ செங்கீரை
செந்திலின் வேள்கூ டுந்தமி
ழோனே–செங்கோ செங்கீரை
செப்பின்நல் ஆறாறு ஒன்றரு
ளோனே–செங்கோ செங்கீரை
செந்தழல் நீசேர்ந்து அன்றிடு
வோனே–செங்கோ செங்கீரை
திங்களின் மேலாம் வெண்பொடி
யோனே–செங்கோ செங்கீரை
சிந்தையின் மூளார் வந்தரு
கோவே–செங்கோ செங்கீரை
திண்பெறு கோடு ஆ ஒன்றார்நல்
ஊரா–செங்கோ செங்கீரை

வி–ம் திருச்செந்தூரில் வழிபாட்டிலிருந்த வேலை ஊடலால் ஒருகால் வீசியது "சிங்களர் வாழும் கொழும்புக்கு அன்பர் விருப்பப்படி சென்றது, செந்திலாதிபனுக்குப் பதினறு பனுவல் பாடியது, தாமிரபரணியாற்றின் நடுவில் முருகன் மூர்த்திறப்புக் கூறியருளியது, தமிழ்ப் பாடல் உள்ள ஏடுகள் பலவற்றை ஊடலால் நெருப்பிலிட்டெரித்தது, திருமேனி முற்றும் திருநீறணிந்து முனிவராயிருந்தது, வலிய கொம்புகள் பசுக்கள் பெற்ற திருவாமாத்தூரினை வசிப்பிடமாக ஏற்றது, இவை இக்கவியிலமைந்த செய்திகள். கோடு-ஆ-கோடா என்று சந்தம் நோக்கிநின்றது சிந்து-கடல் மற்றும் கண்டுகொள்க.

செங்கீரைப்பருவம் முற்றிற்று. பருவம்–2 கவி 20 10

# 3. தாலப்பருவம்

**இப்பருவம்-தொட்டிலில் இட்டு உறங்கவைப்பதாகக் கூறுதல். தாலு என்பது நாக்கு, நாவசைத்து இனிய இசையுடன் பாடுவதால் இசையில் உவந்து மகவு உறங்கும் என்பது மரபு.**

## நூலருமை கூறல்

*சிமிழ்த்தல் புரிமா யாபந்தத்*
*தியக்கால் உண்மை உணர்வின்றித்*
*செய்வ தறியா எமைப்போலச்*
*செனித்தா யெனநிற் சொலலாமோ?*
*இமிழ்த்தண் மதமால் யானையென*
*இலங்கும் கவிஞர் நெஞ்சேங்க*
*இனிய ஒலியல், ஏகத்தாள்,*
*இதழ கலந்தா தியும், அன்பில்*
*அமிழ்த்தும் மற்றைப் பனுவல்களும்*
*அறைந்தாய்! அசுவு மன்றிஅவை*
*அனைத்தும் ஏட்டிற் பொறித்தூர்வைத்த*
*அருமை பெருமை என்புகல்வேன்!*
*தமிழ்த்தென் பாண்டித் தவமதலாய்*
*தாலோ தாலோ தாலேலோ*
*சரதா! மாதைப் பதிவிரதா*
*தாலோ தாலோ தாலேலோ*

வி-ம். சிமிழ்த்தல்-கட்டுதல். தியக்கு-மயக்கம் இமிழ்-ஒலி- அது மதம் அருவிபோலப் பெருகி வழிதலால் உண்டாகும் ஒலி. மிகுதிபற்றிக் கூறும் முறை. ஒலியல்-அது அறுபத்துநான்கு கலைச்சந்தப் பாட்டு முப்பதுகொண்டு அந்தாதித் தொடர்பில் பாடப்பெறுவது. எட்டுத் திருப்புகழ்கொண்ட ஒரு பாடல். இப்பாடல்போல் இது வரை யாரும் பாடிலர். இப்படி முதலொலியலந்தாதி-பேரொலியலந்தாதி என இரண்டு நூலியற்றினர். நடு ஒலியலந்தாதி - என முப்பத்திரண்டு கலையில் அம்முறையிற் பாடினர். இவை புதியனவாம். அன்றியும்,

ஏகத்தாள்-நான்கடியும் ஒரேவிதமாயிருந்து பொருள் வெவ்வேறாயிருப்பது. இதழகல்-என்பது நிரோட்டமென வழங்குவது. ஒட்டம்-உதடு நிர்ஒட்டுதல் குவிதலின்றி யமைவதென்பதாம் இவ்விதப் பாடல்களில், அரி, சிவன், முருகன் ஆகியோர்மீது, தனித் தனியே முப்பது முப்பது பாடல் இயற்றி, அவற்றிற்குப் பதவுரை,

கருத்துரை, ஞாயவுரை, இலக்கணவுரையுடன் பாடியருளியதன்றி இன்று தமிழ்ப் புலவரறியும்படி பனையோலை யேட்டிலும் எழுதிவைத்தனர். இவை தமிழுலகுக்கு அரிய கருவூலமாகும், என்பதைப் பாராட்டியதாம். 1

## கௌமார சாத்திர நூல்களியற்றிய மாண்பு

கந்தக் கடவுள் இருமூன்று
கருணை வதனங் களும்பிரமன்
கழறும் நெறிஆ றெனச்,சிறந்த
கவுமா ரப்பேர் அன்பர்கொளச்
சொந்த மனச்சான் றுக்கண்டு
சொன்ன வுண்மை தனையுணர்ந்து
தூய தவஞ்செய் துண்மைநிலை
தோய்தல் பெரியோர்க் கமைவதுவே
மந்தக் கருத்தோ ரறிவாரோ?
மலிநூல் கற்று வாடாமல்
வழுத்துந் தியாறு நுபூதியில்ஓர்
வண்பா வுணர்தல் மிகும்நலமாம்
சந்தத் திலக்க ணைப்பகர்ந்தாய்!
தாலோ தாலோ தாலேலோ
சரதா! மாதைப் பதிவிரதா
தாலோ தாலோ தாலேலோ.

வி—ம் முருகப்பெருமான் ஆறு திருமுகங்களும் சௌர முதலான ஆறு சமயங்களென்ற உண்மையை அநுபவத்தாற்கண்டு, பின் பற்றிவரும் அன்பர் அறியக்கூறிய பெருமையை, என்போன்ற தாமத குணமுடையவர் அறியக்கூடுமோ! பலநூல் கற்று மயங்காமல், உபாசனை புரிவோர்க்கு அக்கருத்தைத் தெளியக்கூறிய தியாறநுபூதியின் ஒரு கவியே போதும். வண்ணத்துக்கெனத் தனியிலக்கணம் ஒன்று இயற்றியவரே—பதிவிரதா என்பது, திருவாமாத்தூர் சென்றபின், மாறி வேறு தலம் போவதில்லை என்ற விரதமுடனிருந்ததுபற்றி அமைந்த சிறப்பு 2

## ஊசற்பாட்டாய் உவக்க எனல்

செருவார் புயமால் படுத்துறங்கும்
சேவை பெறும்நாள் பாரணங்கின்
செயிர்தீர்ப் பதற்(கு)இப் பகவனெழும்
தினம்யா தென்னத், திருமகள்தான்

வரும்எல் லையினி அடுத்ததென
வழுத்தக், குருகூர் மாறனும்அவ்
வாறே சொற்றான் எனநீசொல்
வாய்மை யதனை மறந்ததுபோல்
திருமே னிஅயர்ந் திடத்துயிலேல்,
செப்பும் நூலின் முறைபகர்ந்தேன்
சேர்ந்த ஊசற் றுதியாகச்
செவியேற் றருட்சீர் திகழ்பெருமை
தருவாய்! மருக தாசகவத்
தலைவா! தாலோ தாலேலோ
தண்ட பாணீ! ஆமாதைத்
தவத்தாய் தாலோ தாலேலோ

வி-ம். ஒருநாள் மனவெளியில், திருமால் படுத்து உறங்குவதும், சீதேவி பூதேவி என்பார், அவர் திருவடி வருடுதலுமாகக் கண்டனர். திருமகளை நோக்கி தாயே! முன்பு பசுக்கள் மழையால் நனையாமல் மலையைத் தூக்கிக் காத்தனரே திருமால், இன்று நீசர் உணவுக்காகக் கொன்று குவிக்கின்றனரே! இதைத் தவிர்க்க எப்போது துயிலை விட்டு எழுவார்? என வினவினர் அதற்கு விடையாக, ஆம் எழுந்துவிடுவார்—சமயந்தான் என்றனள் அதை வழிமொழிபவராய், சடகோபர் அருகில் நின்று ஆம் எனக் கூறினர். அதை அறியப் பாடியதை மறந்ததுபோல. இன்று நீ துயிலக்கூடாது ஏனெனில், திருமாலெழுந்துவரும்சமயம், தூங்கினால் எவ்வாறு சேவை காணமுடியும்?

எனவே இப்பாடல் பிள்ளைக்கவிக்குரிய முறையிற் பாடினேன். ஊசற்பாட்டாக ஏற்றருள்க? அருட்பெருமை சாரத்தருக. என்பதாம்.

"செய்யபொன் மேனித் திருவே! செந்தாமரைச் சீர்மகளே
பையார விற்றுயில் கூர்பெரு மான்எழும் பான்மை சொற்றாய்
ஐயமில் சீர்ச்சட கோபனும் ஆங்குரைத் தான்.கண்டிலேன்
உய்யஎன் றாண்டருள் வாய்பது மாதனத் துத்தமியே,

(என்பது இவரருளிய திருமகளந்தாதிப் பாடல்.) "

அருணகிரிநாதருடன் ஒப்பிட்டுக் கூறல்

சிகரி மிசைநின் றிப்புவிப்பால்,
சேகர் சிதைப்ப வீழ்ந்ததனைச்
சிந்து நீரிற் பாக்குமரவைச்
சிதறி விடுத்த செய்கையினைச்

தகரில் உலவு முருகன்மிசை
சந்தத் தமிழ்ப்பாச் சாற்றியதால்
சாருந் தவவே டப்பொலிவால்,
தன்மார் பினில்வே லவன்தட்டி
நிகரில் உறுதி பகர்தலினல் -
நிலவும் அருண கிரிநீயாம்
நிசம்நன் குணர்ந்தேன்,வேளும்உன்பால்
நிகழ்த்தல் உலகிற் பலரறிவார்
தகவார் கவுமா ரக்குரவா!
தாலோ தாலோ தாலேலோ
சரதா மாதைப் பதிவிரதா!
தாலோ தாலோ தாலேலோ.

வி-ம். அருணகிரிநாதர் உயிரை விடும்பொருட்டுத் திருவரு ணைக் கோபுரத்தேறிக் குதித்தார். திருச்செந்தூர்க் கடலில் திருப் புகழ் ஏட்டை உருவிவிட்டார். முருகன்மீது திருப்புகழ் பாடினர். தவவேடமுற்றிருந்தார் முருகன் மார்புதட்டிக்கூறிய உறுதி கண் டார். "நானென்று மார்தட்டும் பெருமாளே" என்பது திருப்புகழ்ப் பாடல். அதுபோலவே (தண்டபாணி சுவாமிகளும்)

திருமலையில் ஏறி உருண்டாய், திருச்செந்தூர்க் கடலிற் பாட லெழுதிய ஏட்டினை உருவிவிட்டாய் - முருகப்பெருமான்மீது சந்தப் பாக்கள் பாடினாய், தவவேடமுடன் காட்சியளித்தாய், முருகப்பெரு மான் ஒரு காட்சியில், உன்வடிவிற்றோன்றி, மார்பில் தன் வலக்கை யால் தட்டிக் காப்பேன் என்று உறுதி கூறியதைப்பெற்றாய். ஆகவே அருணகிரிநாதர் மறு அவதாரம் என்ற உண்மையறிந்தேன். முருகப் பெருமானும் இந்த வுண்மை கூறினர். பலரறிந்த உண்மை இது என்பதாம், 4

## பொதுத் துதி

நவந்தோய் பனுவற் றொகையனந்தம்
நவின்றாய்! பசுவின் இனமுழுதும்
நலிய வதைத்துண் பவர்முழுதும்
நசிய நிதமும் நாடிடுவாய்
பவந்தோய் படிற்று மொழிபேசும்
பதடி யனையார்க் கறுவிடுவாய்
பாடும் நால்வர், பதின்மரைப்போற்
பலநற் றலங்கள் பழிச்சுற்றாய்

சிவந்தோய் திருநீ றுடல்முழுதும்
சிறக்கப் புனைந்தாய்! விரிந்தசைந்த
சிகையாய், கீள்கோ வணம்காவிச்
செந்தா னையுர்அக் கமும்அணிந்தாய்
தவந்தோய் பெரியோர் மகிழ்மாதைச்
சகளக் குரவா! தாலேலோ
சதகப் பதிகம் அழகன்மிசைச்
சாற்றும் பெரியாய் தாலேலோ.

வி-ம். தவந்தோய்பனுவல்-பிரபந்தவகையில் இல்லாத புதிய நூல்கள். இதனைச் சுவாமிகள், "முதுநெறிப் பனுவல் பல, புது நெறிப்பனுவல் பல" என்பர். விவரம் நூலட்டவணையிற் காண்க. பதடி-பதர்போல்வர், சதகப்பதிகம்-சதகம் நூறு பாட்டுடையது. பதிகம் பத்து எண்ணுடையது எனவே நூறு நூறாகப் பத்துள்ள (ஆயிரம் பாட்டுடைய) நூலென்பதாம். இதுபோல. பதிகச் சதகம் - பத்துப் பாட்டுடைய பதிகம் நூறு சேர்ந்தது (ஆயிரம் பாடல்) என்க. இது புது நெறியில் ஒன்று. 5

வேறு

திருச்செந்தூருக்கு முருகன் உரைப்படி 16 பிரபந்தம் பாடுதல்

முழங்குபே ரலைநீடு செந்திலம் பதியில்அறு
முகன்ஒருவன் மீது விர்ந்து
முதிர்செந் தமிழ்ப்பனுவல் என்றனக்(கு) ஈராறு,
முதல்வீர னுக்கிரண்டு
கிழங்குண்டு உவந்தகுற வள்ளி,தெய் வானைநகை
கிளர்வுற ஒவ் வொன்று தாக
கெழுவு பதினறுசுவை மலியநூ றெண்ணக்
கிளத்த,அவ் வாறு கூறி
வழங்குபே ரருள்குலவு சண்முகவி லாசப்பொன்
மண்டபத் தெவரு மகிழ
மதயானை மிசையேடு வைத்துவலம் வந்(து)
வைகி,வல் விடியே றெனத்
தழங்குற மகிழ்ந்தரங் கேற்றும்அருள் வாயனே
தாலேல தாலேலவே
தண்டலைக் கவின்மாதை யம்பதிக் குருநாத
தாலேல தாலேலவே 6

சிரவை - இராமானந்த சுவாமிகளை ஆண்டருளியமை கூறல்

சிவபிரான் நெற்றிவிழி யூடுதித் தருள்குமர
தேசிகன் பொதியை மலையிற்
சென்றோர்காற் குறுமுனியி டம்பல்உப தேச
செப்பியுற் றதில்ஓர் மாற்றம் [மொழி
தவமனத்(து) ஐயம்உண் டாக்கலின்,வி னவிடச்
சாமிஉத் தரமொ ழிந்தும்
தட்டியெதிர் பேசலாற் பூவுலகி னிற்பிறவி
சார்ந்தறிதி யெனமொ ழிந்த
நவமொழிகொ(டு) அணிகுலவு சிரவணபு ரப்பதியில்
நலமுறஉ தித்த ருட்சீர்
நாட்டமிக வேபழனி வெற்பருகில் வந்துகுறை
நவில்இரா மானந்தமா
தவமுனிபு னைந்திடத் தருதுணைத் தாளனே
தாலேல தாலேலவே
தண்டலைக் கவின்மாதை யம்பதிக் குருநாத!
தாலேல தாலேலவே.

வி-ம். மாற்றம்-சொல், சாமி-முருகன், உத்தரம்-பதில்உரை, குறை-ஆட்கொள்ளவேண்டுமென்ற விண்ணப்பம். 7

## வேறு–சந்தம்

தந்தன தானன-தந்தன தானன-தானதானா

சந்தம காகவி யின்றிரள் கூறிய–தாராளாசீலா!
சண்டணை வேதனை அன்பர்உ றாதருள்–தாதா! மாபோதா
செந்திரு நாயகன் இன்றயை மேவிய தேவே! வானோர்தாழ்!
செஞ்சரண் ஆர்சுக னின்தயை சூழ்கிய–தீரா! நீறாடி
சந்தொடு காரகில் கந்தம்வி ராவிய–தாதார் பூவோடே
தண்கரை மோதிடு பம்பையின் நீர்வயல் சார்வாழ் வால்மாசீர்
தந்தவிர் மாதையி டந்திகழ் தேசிக–தாலோ தாலேலோ
சஞ்சலம்ஈர்பத! தண்டணி தாபத! தாலோ தாலேலோ.

வி-ம். திருஞானசம்பந்தர் திருவாமாத்தூர்த் தேவாரப் பதிகத்தில், "கதவில் மாமணி சொன் கொழித்திழி சந்துகாரகில்தந்து பம்பைநீர். அருவிவந்தலைக்கும் ஆமாத்தூர்" என்றனர் 8

**தான்ன தானன - தான்ன தானன - தாஞு தாஞு.**

தாதவிழ் தாமரை மீதுறை
பூமகள்—சார்மார் பார்சீர்சேர்
சாமள மேனியன் நான்முக
ஞதியர்—தாமே ளேமேலாம்
ஆதர மோடியு மாறுசெய்
மாதையில்—ஆர்வாய்!மாலீர்வாய்
ஆரண ஆகமம் ஓர்பவ
ரேயுணர்—ஆசா ரா!மாசார்
காதகர் பாழ்நர கூடுற
நாடும்ம—காகோ பாவேசா
காரண மோடியல் காரிய
மோனமம—காயோ காசாரா
சாதகர் தேறும்உ பாயம்வின்
மாதவ—தாலோ தாலேலோ
தாபதர் கூடும் நன் மாசையின்
மேயவ—தாலோ தாலேலோ.

வி—ம். தாது-மகரந்தம், சாமளமேனியன்-மேகவண்ணன், சாதகர்-உபாசனையினர். 9

**தனதன தானன—தனதன தானன - தனஞு தாஞு**

புவனமெ லாம்உயர் சுகமுற
நாடிய—புனிதா தாலேலோ
புலவர்பு ராணமென் ஒருபெரு
நூல்நவில்-புகழோய் தாலேலோ
துவர்நிற மேனிகொள் குகனுரு
வாரிகர்—சுகிர்தா தாலேலோ
துகளுடை யாரையும் நல்மற
வேபுரி—தொழிலோய் தாலேலோ
கவலையி லாதுளில் நினைபவ
ரேயுணர்—கனியே தாலேலோ
கணின்மணி தாமரை மணியுட
னேபுனை—களனே தாலேலோ

குவலய மாதுயர் கொடிதற
வேமுயல்-குணனே தாலேலோ
குளிர்பொழில் மாதையில் வருகவு
மாரர்கள்-குருவே தாலேலோ.

வி-ம். புலவர் புராணம் - தமிழ்ப் புலவராயும், பலிதவாக்குடையவராயுமுள்ள எழுபத்திரண்டு புலவர் வரலாற்று நூல். புலவர்கள் பல புராணம் பாடினர் ஆனால் புலவர்கட்கு என்று புராணம் பாடியவர், தண்டபாணி சுவாமிகளேயாவர் திருத்தொண்டர் புராணம் அறுபத்துமூன்று நாயன்மார்களும், தொகையடியார் ஒன்பதும் சேர்த்திருப்பதுபோல, அறுபத்தொன்பது தமிழ்ப் புலவர்களும், அறிவுத் தன்மைப் புலவரென்பதில், குமணன்-காளத்திப் பிள்ளையையும், பல தெய்வப் புலவரென்பதில், பலரைச் சுருக்கமாகவும் - கண்கண்ட புலவரென்பதில் வடலூர் இராமலிங்க சுவாமிகளையும் கூறியுள்ளனர். மற்றும் விபரம் அப்புராணத்திலறிக—

துவர்-பவளம்-முருகன் திருமேனி சிவப்பு. அல்லாமல் தண்டபாணி வடிவமாக அடிகளுமிருந்தனர். எனவே, "குகன் உருவாதிகழ்" என்று கூறியதாம். கண்ணின் மணி-உருத்திராக்க மணி, களன்-கழுத்தினர். "வரு" என்ற சொல் முக்காலத்துக்குமியையும்10

தாலப்பருவ முற்றிற்று.

பருவம் 3-க்கு கவி 30

---

## 4. சப்பாணிப்பருவம்

சப்பாணியென்பது இரண்டு கைகளையும் சேர்த்துத் தட்டுதல். குழந்தை விளையாட்டில் ஒன்று. மகிழ்ச்சியால் அமைவது ஆகும்.

### கடலில் நேர்ந்த கனவிபத்தகலல்

#### அடிகளின் கைச்சிறப்புக் கூறல்

கொதிநீர் அலைக்கடற் காயலிடை வள்ளமேற்
கொண்டுசெலுர் நாளில் மதியம்
சுலவிடா நள்ளிரவில், ஓடம்விடு வோர்மதுக்
கூடிவெறியி னர்கள், உடன
வதிவோர்உ யிர்த்தொகைவ தைத்(து)ஊன்ற உலுங்
வண்கலத்(து) ஓட்டை யொன்று [கொடியர்
மருவிநீர் உட்புகக், கலையால் அடைத்(து) இதயம்
மருவுர்நிட் டையில்வி ளங்கத்,

துதிவேள்வெண் ணீற்றுப்பை வடிவாய்உ றுந்தகை
துலங்க,வண் கரையி லேகித்
தோல்பொருவ னப்பதியின் இரவுபசி நீங்கிடத்
துளவமால் பனவன் உருவாய்த்
ததியோ கனங்கார் பெற்றகைக் துணையுளாய்
சப்பாணி கொட்டி யருளே
தாதனிம்ப ஏர்ப்பொழில்கொள் மாதைநக
சப்பாணி கொட்டி யருளே. [ரிற்குரவ

வி-ம். கொச்சியிலிருந்து வரும் சமயம் இடையில் கடலின் சிறுபகுதியைக் கடந்து வரலாயினர் அடிகள். அது இருட்டு நேரம் உடன் சிலரும் இருந்தனர். ஓடம் செலுத்துநன் மதுக்குமயில் மயங்கித் திசை தெரியாமல் விடுகின்றான். மரக்கலத்தில் நாவின் பெருவிரல் நுழையுமளவில் ஓட்டை ஏற்பட்டது நீர் உள்ளே ஏறியது. என்னாகும்? துணியைச்சுருட்டி அடைக்கலாயினர் கீழ்ப்பக்கமானால் நிற்கும். மேலே அடைப்பதால் போகும்வேகத்தில் உள்ளே வருகிறது. உள்ளேவந்த நீரைத் துணியால்நனைத்துப் பிழிவதானால் விளக்கில்லை, இருட்டிரவு. பலரும் உயிர்தப்பி ஊர் போவதில்லை. உயிர்போவதுறுதியென்றனர் அப்போது-சுவாமிகள்மட்டும் கடமையைப் புரிவதானார். தமிழ் பேசுநரில்லை மற்றும் புலால் உண்ணும் மக்கள் சிரித்தவன் ஒருவன் இவரது சொல்லுக்கிசைந்து அவ்வேலை புரிவதானான் ஒரு தடவை பாறையொன்றில் மோதியது, கரையை நோக்காமல் கடலை நோக்கி ஓடம் செல்கிறது.

சுவாமிகள் திருவருளைச் சிந்தித்தனர். அப்போது முருகன் மன வெளியில் தோன்றி அஞ்சாதே. திருநீற்றுக்கோயில் (விபூதிப்பை) வடிவில் உன்னுடனுள்ளேன் என்றனர் அசரீரியாக ஓடம் செலுத்துநனை அதட்டி வழியே செலுத்த ஓதினன் முருகன். கண் விழித்தனர். கிழக்கே சூரியனொளி தெரிந்தது. குடிவெறியும் தெளிந்தது கரை சேர்ந்தனர். உடனிருந்த தமிழனுடன் நடந்தனர் வழிபாடுசெய்ய வசதியில்லை இரவு வந்தது பகல் உணவில்லை அதுசமயம்-திருவருளை நாடி. இன்று பூராவும் உணவின்றி வாடும் துயரம் எல்லா உயிர்கட்கும் உணவளிப்பவனைச் சார்வதாக. என ஓதி இருவரும் பெருவனம் என்ற ஊரின் சத்திரமொன்றில் தங்கினர்.

முன்னிரவுநேரம், ஒருவர் வந்து, இங்கே உணவின்றிப் பசியாயிருப்பது யார், என்று வினவினர் யாரையோ என்றிருந்தனர் மறுமுறையும் கேட்டனர் சரி இதோ இருக்கின்றேன் என்றனர் உணவு கொண்டுவந்துள்ளேன் பெறுக என்றனர் எழுந்துவந்து கண்டனர். என்னே வியப்பு! தூய வைணவ அந்தணர். பன்னிரண்டு நாமம், மார்பில் முந்நூல் திருமாலே என எண்ணினர் இருப்பினும்

மனித இயல்பு நம்போன்ற அந்தணர்போலும் என எண்ணச் செய்தது. உணவு கிடைத்தாற்போதுமென்று உண்பவனல்ல அடியேன். நீர் தேவை கைகால் சுத்திசெய்து, உண்ணவேண்டுமல்லவா என்றனர். சரி வா என்றழைத்தேகினர். பின்புறம் குளம் இருந்தது. நான் இன்னும் பலர் எதிர் பார்ப்பவர்கட்காகப் போகவேண்டுமென்றோதி, உணவை நல்கினர். பெற்றனர் சுவாமிகள், மறைந்தனர். அவர்.

அது மலைவாழையில் இருவர் உண்ணுமளவு சோறு, உப்பு, மோர், மோரில்உப்பிட்ட மிளகாய் இரண்டு இருந்தது. தான்உண்டு, உடனிருந்தவனுக்கும் உதவினர். அந்த மிளகாய் ஒவ்வொன்றும் எட்டு விரல் நீளமிருந்ததென்கின்றனர் நூலில்—அந்தக் கருத்தை விளக்கி – அந்த அருட்பிரசாதம்பெற்ற உன் கைகளாற் சப்பாணி கொட்டு என்பதாம். 1

## ஏட்டின்கண் உள்ள பாட்டின் அருமை

பலமலைதொ றுந்திருந டம்பயில்சண் முகன் இரு
பதாம்புயத் துணைநாடி, நற்
பத்தியொடு செபதவம் பகரும்வய தெட்டரை
பதிந்திடும் அந்நாள்தொ டங்கிக்
கலகமத வாதமரு வாதகவி அயுதக்
கணக்கினிற் பிழையொர் சிறிதும்
கலவாமல் மறுமுறைபெ யர்த்தெழுதி டாநலம்
கனிமுத் துக்கோர்வை போல்
குலவியப ழம்பாடல் வரைவதென, நிட்டையிற்
தகவும்உள்வி யந்து கூறக்
குளிர்சருவ சாதா ரணிப்பெய ரெழுத்தாணி
கொண்டுபனை மடலில் எழுதும்
சலசமலர் புரையுர் இரு கைத்துணைக ளாற்சிறிது
சப்பாணி கொட்டியருளே
சாதளிம் மலர்ப்பொழில்கொள் மாதைநக
சப்பாணி கொட்டியருளே. [ரிற்குரவ!

வி—ம். அயுதம்-ஆயிரம். அடிகளியற்றும் பாடல்கள் ஆயிரக் கணக்கிலேயிருக்கும். திருவரங்கத்திருவாயிரம் தில்லைத் திருவாயிரம்-தெய்வந்திருவாயிரம், பழனித்திருவாயிரம், சகத்திரதீபம், பதிகச்சதகம்-சதகப்பதிகம். திருவாமாத்தூர்த் தலபுராணம், குருபரதத்துவம்-ஆதியன ஆயிரமென்ற அளவு, ஏழாயிரப் பிரபந்தம் ஏழாயிரம் பாடல், நூற்றுக்கணக்கில், மாலை-அந்தாதிபல - பிள்ளைத்தமிழ்

ஆறு' இவ்வகையில் எந்தப்பாடல் பாடுவதாயினும் சிந்தனையில் எண்ணியதும் பாட்டு வரும். எதை எண்ணுரோ அதற்கான இயல்புதாமாக அமையும், அடிகள் கருவி-உள்ளிருந்து தூண்டுபவன் முருகன் கருத்தா-வரிவடிவம் கோணமல்-ஒழ்றுக்குப் புள்ளியிடாமல், இடையினாகரத்துக்குக் கீழ்க் கோடிடாமல் தனித்தனி அக்கரங்களாகவும், சந்தமானல் பெரிகை. எதுகை. மோனே, பொருள் வகை தானேயமையும். இதைஎழுதும் எழுத்தாணிக்கு முருகனே கொடுத்த பெயர், சருவசாதாரணி-ஏதையும் மிக எளிதாக எழுதவல்லது என்பது பொருள். இப்படி ஓம்பதாயிரம் பாடல் கைவசம் உள்ளன. பாடலை எழுதியபின்புதான் படித்துப் பார்ப்பார்கள். "கவிதை வந்த பின் பார்த் துவப்பதென்றன் வழக்கம் உலகீரே" என்பதால் அறியலாம்

'வந்தபடி பாடுகின்ற என்றனது பாடலின்கண்-வன்பிழையேதேனும் ஒன்றில்-உனதேயாம்' என்று முருகனிடம் கூறுகின்றனர். தன் கவியிற் குற்றம் காணினும் புகழ்ந்தாலும் எனக்கில்லை எனையசைப்பாற்காமே' என்பர். இவற்றுடன், தினவழிபாடு, சிறப்புவழிபாடு தலயாத்திரை செபம் இயானர் நடந்துசென்ற யாத்திரை மிகுதியுண்டு - புகைவண்டி பின் ஏற்பட்டது. கொழும்புக்குமட்டும் கடல் யாத்திரை சென்றனர். 2

## கைதட்டுவதன் குறிப்பு இதுவென்றல்

*மாடு,மனை, சுதர்.வீடு, காடு.பொருள், மண்ணென்று*
*மருவுமனை என்ன தென்னும்,*
*மமகார மோகமுட னேயோன்னாக்கருதி*
*மருளுறும் அகங்காரமும்*

*கூடும்அஞ் ஞானசா கரமூட முந்திமெய்*
*குறித்திடும் உணர்ச்சி யின்றிக்*
*கொடியமாயா இருளினிற்சமையும் உலகரைக்*
*கூடிவம்மின்கள்! அருளால்*

*நீடுமுயர் தீபமென நன்னெறி துலங்கி*
*நிகழ்ந்துவேன் நூல்கள் பலவே*
*நிலவுபுண் ணியஅளவில் உயர்தவம் புரிமின்.!*
*நிலைகொள்மின்' வினேநோயறச்* [அருள்

*சாடுமின்!எனக்கட்டி ஒதல்போல் ஒன்றனிச்*
*சப்பாணி கொட்டியருளே*
*தாதவிழ்மலர்ப்பொழில்கொள் மாதைநக*
*சப்பாணி கொட்டியருளே.* [ரிற்சரவ;

**வி-ம். சாகரம் - கடல், தீபம் - அருளொளி, தாமியற்றிய நூல்களில், சகத்திரதீபம்-கௌமாரதீபம், எனவும் உள்ளன. எவ்வளவு தான் அருளுரை கூறினும், அவரவர் நல்வினைக்கேற்பவே கொள்ள முடியும் என்பதைக் குறித்துள்ளமை காண்க சாடுமின் - ஒழிமின் என்பதாம்.** **3**

## பாடல்களை அளவறப்பாடி எழுதும் கைகளின் சிறப்பு

*கொட்டிலில் அணைந்(து) இளம் புல் நுனிகடித் துண்டு*
*கொடியசுணை யின்றி, ஐந்தாய்க்*
*குலவுகவ் வியம்நல்கி, மேலவர்வ ணங்குசீர்*
***கொள்பசுவி னத்தை மாய்த்து***
*மட்டில்மகிழ் வுடன் அந்த ஊனருந் திடுதீயர்*
*வாழ்வொழிக் கக்க ருதி,உள்*
*வாடி,அழ கேசன்முத் தாம்பிகையு டன்திகழும்*
*மாதைநகர் மேவி யவிர்வாய்*
*தட்டிலருள் பலிதமுற நல்கார்த குறையெணிச்*
*சாந்தமனம் நொந்து முன்னுன்*
*தமிழ்மருவும் ஏடுகள் கிழித்துநற் பொருநை*
*சாகரப் புனலில் அனலில்* [யொடு
*கொட்டிஅழி வித்தும்உடன் எழுதுமிரு பாணியாய்*
*கொட்டியருள் சப்பாணியே*
*உறைவில்பல் வாழ்வுமிக மருவும்நெல் வேலி*
*கொட்டியருள் சப்பாணியே* [யிறை

**வி-ம்.** கொட்டில்-பசுத்தொழுவம் (கொட்டகை) பசுவினங்கள் இயல்பாக வளரும் புல்வகையைக் கடித்துண்பன. அதனால், அவை மீண்டும் தழைப்பனவாம் பட்டுப்போவதில்லை. சாதுவான குணமுடையவை பழத்தை நாம் உண்டு அதன் மேல் தொலியையும் நெல்லை எடுத்துக்கொண்டு வைக்கோலையும், அழுகிய புழுத்த காய் கறிகளையும் பசு முன் இடுகின்றோம். அதை உண்டு இனிய பாலையும், கோசல கோமயத்தைத் தந்து புனிதமாக்கி வாழ்கிறது. அத்தகைய பசு வகைகளை உணவின்பொருட்டுக் கொன்று உண்ணும் தீமை சகியாமல் அதற்கான தீர்வுகாணத் தவமியற்றியபோது. பசுக்கள் வழிபட்டுக் கொம்புபெற்ற திருவாமாத்தூருக்கு வரும்படி-அத் தலத்து அழகியநாதப்பெருமான் அழைக்கவந்த பெருமானே!

அதற்கான திருவருள் பெறவேண்டிப் பாடிய பல பாடலமைத்த ஏடுகளை-தாமிரபரணி ஆற்றில், திருச்செந்தூர்க்கடலில், தீயிலிட்டு

ஊடலால் அழித்தாலும், மீண்டும் மீண்டும் பாடல்களைச் சலிப் பின்றி எழுதும் உமது திருக்கரங்களாற் சப்பாணி கொட்டுக என்ப தாம். "ஊடல் ஒருபுறமிருப்பினும் பாடல் எழுதாமலிருப்பதில்லை" "வாய் வந்தவா பாடிற்று அம்கை வரைந்தது மனம் செவ்வேள் பால் இந்தவாசெய்கென்று ஏற்றது", என இவர் கூறுவதாலறிய லாம். 4

## அடிகள் திருவேடத்தை அணியும் சிறப்புக்கூறல்

வேறு

சீலம்பொ ருந்தும்எழில் மேனியின்மு ழுக்கவெண்
திருநீ றணிந்(து)அ தன்மிசைத்
திகழ்நெற்றி யிற்கோபி, சிந்தூரத் திலகமும்
தீட்டி - இரு கலைமண் குறி
தூலம்ப டிந்தஇரு புயமீதில் எழுதி,மெய்
துலங்கும்மார் பிற்க ளத்தில்
தூயநீ றகுழைத் திடுகுறி, இ ருந்தையால்
தோய்முழுந் தாட் புள்ளிகள்
ஞாலம் புகழ்ந்திடும் துளசி,தா மரை, அக்கு
நல்வேங்கை மணியின் மாலை
நன்கணிந் திட அகம் புறமாய சமயநெறி
நண்ணியகு றிப்பில் அணியும்
கோலம் புனைந்தகைத் தண்டபா ணிக்குரவ!
கொட்டியருள் சப்பாணியே
குறையில்பல் வாழ்வுமிக நிறையும்நெல்வேலி
கொட்டியருள் சப்பாணியே. [யிறை

வி-ம். அடிகள் முருகக்கடவுளை முக்கியமாக வழிபடுவாராயி னும், சௌரமுதலான சமயங்கள் ஆறையும் சமத்துவமுடையதாகப் போற்றும் சமரச ஞானமுடையவர், இதைப் புறத்திலும் அவற்றின் குறிப்பாகச் சின்னமணிவதாயினர் உச்சிமுதல் உள்ளங்கால்மட்டும் விபூதியணிந்து, மார்பில் குழைத்து முக்குறியாயிடுவர். இருதோள் களில் வடகலை தென்கலைத் திருநாமம், நெற்றியிற் கோபி, நடுவே குங்குமப்பொட்டு, முழந்தாள் இரண்டிலும் ஆறு கரும்புள்ளி, இது புறச்சமயங்கள் ஆறினையும் கீழ்ப்படுக்கியாக ஏற்பதென்ற கருத்து. உருத்திராக்க மாலை துளவ மாலை, தாமரை மணிமாலை, வேங்கை மணிமாலை, வேங்கைமரத்தண்டு கல்லாடை லங்கோடு கௌபீன வுடை, விரிந்த சிகை, இப்படியணிந்திருந்தனர் என்பது அவரது பாடலிற் கண்டதும், தந்தையாரால் கேட்டதுமாகும். இத்தகைய திருவேடமணியவுள்ள கைகளாற் சப்பாணி கொட்டுக என்பதாம். 5

## வேறு

தெய்வம் பலஎன் ருலும்,ஒன்றே
திகழும் எனினும் ஒப்புமுயர்
தெளிவு பொருந்தும் கவுமாரர்
திரள்தோள் கொட்ட,வீரஒலி
செய்வெண் சேவற் புள்ளிரண்டு
சிறகங் கொட்டப், பாரினிடை
தீய செயலாம் கொலைபுலைகள்
செய்வார் சிந்தை பறைகொட்டப்
பெய்வண் முகில்போன்(று) அன்பர் இசை
பிறங்குந் துதித்தா ளங்கொட்டப்
பெருக மணமார் மலர்,மறைகள்
பேசி * இலக்கம் கோடியெனக்
கொய்வந் துன்றா ளினிற்கொட்டக்
கொட்டி யருளாய் சப்பாணி
கோமா னருநற் பதியுடையாய்
கொட்டி யருளாய் சப்பாணி.

வி-ம். தெய்வம் ஒன்றென்ருலும், பல என்ருலும் கௌமார் ஆமென்று ஒப்புவர். எப்படி? ஒன்று என்று சொல்லத் தெளிவு வேண்டும். பல என்பதை எவரும் கூறலாம். அதுவும் உண்மை. பெயரும் வடிவுமில்லாத பரம்பொருள் ஒன்றேதான். அது அன்பர் எண்ணப்படி பல வடிவம் பெயர் கொண்டுவரும் என்பது தெளிவு. ஒரே கடவுள் வடிவிற் பலர் இருப்பர். இவர் அந்தத்த மூர்த்தி உபாசனை முடிவில் அந்தவுருவம் பெறுவர் இது சாரூபம் எனப்படும். சொரூபமென்பது சாரூபமெனப்பட்டது. யோக நிலையினர் பெறுவது இது. சிவசொரூபம்பெற்ற உருத்திரர் பதிஞெருகோடி என்பதாலறியலாம் இவ்விதமே நாராயண வடிவம், கணபதி வடிவம், சத்தி வடிவம், முருக வடிவம், சூரிய வடிவமும் ஆம். சூரியர் பன்னிரண்டு கோடி என்பதும் காண்க. அந்தந்த மூர்த்தி புவனங்களிலிருப்பவராவர்



திருமா தருட்சீர் நீடுகொடைச்
செல்வர் மனையில் முரசுகொட்டச்
சீலர் பசிதீர்ந் திடக்கருணைச்
சீலர் உண்டி மிகக்கொட்டப்

* இலக்கம் -கோடி என்பன, இலட்சார்ச்சனை - கோடியருச்சனையாகும்.

பெருகோ தைகுலா விடஐந்தாப்
பேசும் இயப்கோ யிலிற்கொட்டப்
பிறங்கு மதிகள் தொறுமுகில்கள்
பிரியத் தொடுமும் மழைகொட்ட
வருவே ளாண்மைத் தொழில்புரிவோர்
மனைகள் தொறுந்தா னியங்கொட்ட
வதையுன் அலிதீர் மகப்பனவர்
மனைநெய் பொரிவேள் வியிற்கொட்டக்
தருமான் மியமொங் கணுங்கொட்டக்
கொட்டி யருளாய் சப்பாணி
கோமா துருநற் பதியுடையாய்
கொட்டி யருளாய் சப்பாணி

வி-ம். முரசு மூவகை - மணமுரசு, கொடைமுரசு, போர்முரசு என்பன. ஐந்து இயம் – 'தோல் கருவி, மேளம் ஆதியன' துளைக் கருவி-நாதசுரம், புல்லாங்குழலாதியன, நரம்புக்கருவி-பிடில் போல்வன. 'கஞ்சக்கருவி-வெண்கலத்தாலான தாளம் முதலியன'. மிடற்றுக்கருவி-தொண்டையாற் பாடுவன. இயம்-ஒலி. 7

## வேறு—சந்தக்கவி

### முருகன் முற்பிறப்பு இதுவென மொழிதல்

தந்தா தனதன தந்தா தனதன—தத்தன தத்தான

செம்பா றதில்முரு கன்றா னெழில்மலி
செக்கர்நி றத்தோடு
திண்டோள் வயவன்வ ணங்கா வறஉயர்
சித்தமு வப்பாகி
நம்பா லினிமட தங்கோர் கதி,என்முன்
நத்துபி றப்பேது?
நன்கோர் தரமொழி என்கால், அவன்அரு
ணைச்சயி லத்தேமன்
எம்பால் அருள்கொள்சு கந்தான் உணர்நிசம்
இச்சொல்ல னப்பேசோர்
இன்பார் கனவுபெ றுந்தே சிக!முகி
லிர்பரி சிச்(சு)ஆடு
கொம்பார் பொழில்,பசு வின்றாய் நகரிறை
கொட்டுக சப்பாணி
கொன்றான் அயில்பவர் தம்பால் வெகுள்பவ
கொட்டுக சப்பாணி.

"வல்லைவந்தன்பரைக் காக்கும் செவ்வேற்கை வரதனைக்கண்(டு)
எல்லையில்லாக் களிப்பாய் மடிமீதில் இருக்கும் என்னைத்
கொல்லை அருணகிரிதான் என்றன்னவன் சொன்னதுண்மை
இல்லையென்றாற் குமுக்கென்று வெங்கோடையிடி விழுமே"

என்பதாம்

சுகம்-கிளியான அருணகிரிநாதர். கொம்பு-கிளை, பசுவின் தாய்-ஆமாத்தூர். குமுக்கென்று-திடீரென்று இது பாண்டிநாட்டுத் திசைச்சொல். சுவாமிகள் அந்நாட்டினர். 8

தனனாதனத் தனனாதனத்-தத்தாதனத் தனனா.

அவமார்பிறப்(பு) அறுமாறெனக்(கு) அற்பார்தவத் தினர்பால்
அடியேனும்உற் றிடநாடெனக்(கு)-அப்பேறளிக்குவையோ
சிவனார்அகக் கியனார்கொளச்-செப்போர்மொழிக் குகவேள்
சிகிமேல்ஏறிக் கெதிர்காணஇச்-சித்தேதொழச் சலியாய்
கவலாதுயிர்க் குழுமாபுவிக்-கட்சீர்பெறச் செயவே
கவினார்கலிக் கிள்கூறுமொய்க்-கற்பார்உளக் குரசே
தவமார்குருப் பரனே! அணிச்-சப்பாணிகொட் டுகவே
தமிழ்மாகையுற் றிடுவாய்! கையிற்-சப்பாணிகொட் டுகவே

வி-ம் அற்பு-அன்பு (வலித்தல் விகாரம்) கற்பு-ஒருமைப்பட்ட நிலை 9

தனதன தத்தன தனனா தத்தன-தத்தன தத்தான.

கருமணி பொக்கவிர் திருமேனிப்பர-கொட்டுக சப்பாணி
சுவையுணர் வுற்றவர் மனமே வுற்றவ-கொட்டுக சப்பாணி
குருகைநகர்த்தவன் மொழிநேசித்தவ-கொட்டுக சப்பாணி
குறைதவிரத்தரு திருநீறுற்றவ-கொட்டுக சப்பாணி

வழி நோக்காதென்பதாம். குருகை நகர்த்தவன்-சடகோபாழ்வார் இவரது திருவாய்மொழியில் அடிகட்குப்பேரார்வம் குணதிசை-கீழ்த் திக்கு. குருபர தத்துவம்-சுவாமிகளது அனுபவ வரலாற்று நூல், தன் வரலாற்றினைத் தானே கூறியது சிறப்பு மாறுபடப் பலர் பல வாறு ஆய்வுசெய்து துன்புறவும், துன்பப்படுத்தவும் நேராத இயல்பி னது-பெரும்பான்மை இதிலடங்கும் எஞ்சியதை, தி. மு. செந்திலுயக சுவாமிகள் கூறியுள்ளனர். 10

சப்பாணிப்பருவ முற்றிற்று.

பருவம் 4-க்கு கவி 40

---

## 5. முத்தப்பருவம்

முத்தம் கொடுக்கும்படி, குழந்தைப்பெருமானை வேண்டுதலா கும். இன்னார் உன் முத்தம் பெற்றார் என்பதைக் குறித்து விரும்புத லாகும்.

முத்தம் உதிக்கு மிடம்பலவா
மொழிவார் அந்தமுத்தநகை
முதிர்ந்து முயலேன் .பரபோக
முயக்கம்அதிலின் றும்,ஐக்க
முத்தர் விரும்பும் தமிழ்ப்பாடல்
முழக்கும் உன்வாய் மொழியமுதாம்
முத்தம் பெறவேண் டி,னன்,சந்த
முதல்வா !முன்னம் வேயீன்ற
முத்தர் வலம்வாழ் வடிவெனும்வெண்
முத்த நகையான் அருள்வேண்டி
முன்னுந் தொழும்பன் நெடுநாளா
முயன்ற தவத்தால் அணிப்பேச்சு

முந்த மளித்க முத்தஉன்வாய்
முத்த மளித்தாண் டருள்வாயே
முத்தாம் பிகைவாழ் மாதையுளாய்
முத்த மளித்தாண் டருள்வாயே.

வி-ம். முத்து என்பது - முத்தம் எனவும் பெறும், முத்தம் என்றால் - விடுதலை என்பது ஒரு பொருள். பாசவிடுதலை முத்தி என்பதாம். பரபோக முயக்கம்-உயிர் ஈடேற்றத்துக்கான பயன் உலகிற் பெறும் முத்தினாற் கிடைப்பதில்லை. எனவே அதை விரும்பவில்லை. ஐக்கமுத்தர்-இறையருளோடு ஒன்றுபடும் வீடுபேற்றுக்குரிய தவசிகள், வேயீன்ற முத்தர் - திருநெல்வேலி யிறைவன் பெயர், முத்த நகையாள்-முத்துப்போன்ற பற்களைக்கொண்ட காந்திமதியம்மை, தொழும்பன் - செந்திநயகம்பிள்ளை (தந்தையார்) பேச்சு முத்து (தாயின் பெயர்) மூத்த-முதல்வனே, முத்தாம்கை வாழும் ஆமாத்தூரிலல்லவா வசிக்கின்றாய்-தருதற்கு உரிமையுண்டென்பதாம்.

மூங்கிலில் முத்து விளையும் - மூங்கிலடியில் முளைத்ததுபற்றி "வேயீன்ற முத்தர்" எனப்பெயரெய்தியது. 1

## முத்தம் பெற்றோர் இவரிவரென்றல்

வளமார் திருநெல் வேலியினில்
வருந்தித் தவஞ்செய் தந்தையாய்
வந்த செந்தி நயகரும்,
மாதா வான பேச்சுமுத்தும்
உளமார் காந்தி மதிமுதலா
உறும்செ விலித்தாய் மூவர்களும்
உரைக்கு மற்றும் சிலர்தாமும்,
உயர்புண் ணியத்தால் முனம்பெற்றார்
தளமுற் றிலுந்தீ ரருள்வேட்டுன்
தகவார் முத்தம் பெறவிழைந்தேன்
சத்தி வடிவேற் குகன்மூத்தம்
கரப்பெற் றிடுநீ தரல்முறையாம்
முளரிப் பிரமன் விதிகடக்க
முத்த மளித்தாண் டருள்வாயே
முத்தாம் பிகைவாழ் மாதையுளாய்
முத்த மளித்தாண் டருள்வாயே.

வி-ம். செவிலியர்-வளர்ப்புத்தாய்மார் மூவர், முருகன் அடிகட்கு முத்தம் தந்தது திருமலையிலேறி உருண்ட அன்று, மனவெளியிற்

ரேன்றி, இப்படி மலையிலிருந்து உருண்டனேயே-உயிர்போனால் என் செய்வாய்! நானல்லவா காத்தேன் என்றனர். அதற்குச் சுவாமிகள் நேரில் தோன்றியிருப்பின் உலகம் ஒப்பும். நான் ஒப்பினேற்போதுமா. இவ்வுடல் அழியின் வேறுடல் வரும். உயிரான எனக்கு அழிவேது என மறுமொழி கூறினர். மகிழ்ந்த முருகன் - நீ 'திருவுருவாளன்' என்றேகிக் கட்டி முத்தமிட்டனர் என்று வரலாற்று நூலிற் கூறுகின்றனர் அடிகள். இதனைக் குருபர தத்துவ நூலிற் காண்க.

"தனித்து வந்து திருமலையிற் சாகாமற் பிழைத்ததனாற்
செனித்ததிரு வுருவாளன் என்றொருபேர் செப்பினன்"

"வேலோன் மற்றொருநாள் எனமனத்திற் றோற்றிஅந்த
மலைமேலேன் சென்றுருண்டாய்! மாய்வறில்என் செய்கிளென்றான்
நிலையாம்எற் கிறப்பேது! நிகழுடலின் மேலகம்ஒன்(று)
அலைநீர்சூழ் பார்உகில் அமையுமென் றேன்,அதுகேட்டு"—

"கைத்தலத்தால் எடுத்தணைத்துக் களிகூர்ந்து கன்னத்தோர்
முத்தமிட்டான், அப்பொழுது மூர்ச்சையொக்கும் சுகமெய்திச்
சித்தமதே சாட்சியதாய்த் திருவருள்இன் பினிற்றிளைத்தேன்"

திருமலைச்சருக்கம் – 24, 25, 23. 2

அருள் முத்தம் பெற்றவர் சிரவை ஆதீன ஆதி முதல்வர் எனல்

பொதியா சலத்தோன் அமிசமெனப்
பொருந்தும் இராமா னந்தமுனி
புனித முறும்நின் உபதேசப்
பொருளாம் முத்தம் பெற்றதனால்
கொதிநீர்க் கடல்சூழ் உலகிலணிக்
கொங்கு சிறந்த சிலவிடவும்
கொடிய செயலார் கொலைபலிகள்
குயிற்று நெறிபற் பலர்கொளவும்,
கதியீந் தருள்வெண் ணீறுகண்டி
காவி யுடைச்சீர்க் கவுமாரர்
கணம்பல் கிடும்நன் மடாலயங்கள்,
கவின்கோ யில்கள்மல் கிடப்புரிந்தான்
முதிர்சீர் அடியேன் பெறுமாறு
மேவா முத்தந் தருகவே
முக்கால் முனிவன் னியின்மாதை
முதல்வா முத்தந் தருகவே.

னர். அதுகண்ட முனிவர், வண்டுருவெடுத்துத் துளைத்துச் சிவனை
வலம் வந்தனர் - அம்பிகை சினந்து, இங்ஙனம் என்னை வெறுக்கு
நீ, உன் உடலின்கண் எனதமிசமான ஊன் உதிரத்தை ஏன் வை
துள்ளனை என்றனள் - தவ வலிமையால் உதறலானார் - தளர்வுற்
போது கைக்கொருகோலும், பின்புறம் ஒரு காலும் உதவினர் சிவன்
எனவே தாயின் சாபத்தால், வன்னிமரமாயிருந்து தவஞ்செய்தவ
ருர் என்பது திருவாமாத்தூர்த் தல வரலாறு. இன்றும் அந்த மர
மூன்று பிரிவினதாய் அடிமரம் உள்ளீடற்றுள்ளது காணலாம்.

இக்கவியில், தசாங்கம், பத்துறுப்புகள் கூறப்படுகிறது

பரசும் புகழ்தோய் மாதைநெல்லைப்
பதி, சற் குரவன் பகரநிகழ்
பலவாம் மதமுங் கொளும்ஞானம்
பகடு, வீர முடன் கூட்டுச்
சிரசுங் குலவு மரங்கொத்தி
திகழுந் துவசம், கருணையெனும்
செங்கோல், நடுநாட் டொடுபாண்டி
திருநா(டு), அரிய தவமுனிவர்க்(கு)
அரசுந் தியசீர்ப் பொதியைமலை,
அணிச்செந் தமிழ்ப்பா மாலை, பம்பை
அருள்சேர் பொருநை ஆறு, தவம்
ஆகும்பரி, பேரொலிகொள் வண்ண
முரசும் தசாங்க மாக்கொடுவாழ்
முதல்வா தருக முத்தமே
மூவாக் குமுத வதிமாதை
முனிவா தருக முத்தமே.

வி-ம். தண்டபாணி சுவாமிகள், பாண்டி நாட்டுக்கும், நடுநாட்டுக்கும் தொடர்புடையரான காரணம்பற்றி, நாடு ஆதியனவற்றை இணைத்துக் கூறப்பெற்றது. பகடு-யானை, எம்மதமும் சம்மதமென்ற ஞானமுடையவர்களென்பதாம். மரங்கொத்திப்பறவை இவர் திருவருள் பெற்று அருள் ஆடல் புரியுங்கால் கொடியாயிருக்குமென்பது முருகன் அருளுரை. முரசு அதிர்ந்த ஒலியினது வண்ணக்கவி படிக்கையில் "கோடையிடி யிடித்தாற்போல் முழக்கம்" எனவும்—இடியிடித்தாற்போற் படித்து. எனவும் அடிகள் கூறுவர். அது வெறும் ஒலி, வண்ணக்கவி, சந்த நயம், பொருளாதியவற்றோடு ஒலிக்கும்.

யுள்ளது. அதிர்ந்த வெற்றி ஒலியுடன் கூவுவதாகும்.

வண்ண ஒலியைப்பற்றிய சிறப்பு

சிரவணபுரம் - கௌமார மடாலயத் தலைவராயிருந்த தவத்திரு. கந்தசாமி சுவாமிகளென்பார். அந்த மடத்தின் சிறப்பியல்புகளைப் பற்றி, காவடிச்சிந்து முறையில் அலங்காரச்சிந்து நூல் பாடினர். அதில் தண்டபாணிக்கடவுள் சந்நிதியில், தண்டபாணி சுவாமிகளது சந்தப் பாடல்களை அன்பர் பாடுகின்றனர் என்பதைக் கூறுமுறையில் ஒரு சிறப்பும் நயமும் உள்ளது காண்க.

சந்தவண்ணப்பாடல் படிக்கும் ஓசை, இடிக்கு ஒப்பாயிருந்தது. பாம்புகட்கு இடிஓசை அச்சந்தரும் 'இடியோசை கேட்ட நாகம் போல' என்பது பழமொழி. ஆதிசேடன் பெரும் புலவனாயினும் உடல் நாக இயல்பினன் எனவே சந்தப் பாட்டோசைகேட்டு, எங்கு பதுங்கி ஒளியலாமென எண்ணுகின்றான். ஆனால் வெறும் ஒலியல்ல, சந்தம் - பொருளின் சிறப்பு இவற்றையெண்ணி நின்று கேட்கின்றான் என்பது ஆசிரியர் கற்பனை.

"பொன்னுலவு சென்னிகுளம்—என்ற காவடிச்சிந்து நடை"

"தேசம்விண்ட தேசுகொண்ட வாசதண்ட பாணிவிண்ட
திப்பியப்பொ ருட்சுவைஅ பாரமே—கொள்தி
ருப்புகழ்க்க விசொல்ஆர வாரமே—கேட்டுச்
சேடன்நீளிடி யேகொலாமென வாடியேபுகல் நாடுவான், மிகச்
சிந்தையிடை யேபயம்நி றைக்குமே—பொருள்
விந்தையின்ஒ சையதை மறைக்குமே" —என்பதாம்.

இப்படிப் பலர் பாடிச் சிறப்பித்தனர். 4

## முற்பிறப்பின் தொடர்பு-இப்பிறப்பிலும் எய்தியதெனல்

முத்தம் கரையில் அலையொதுக்கும்
முந்நீர்த் தொண்சால் புகார்நகரின்
முனிவ னருளால் திருவருட்சீர்
முதிரும் அருணைப் பதியினிடை
முத்தப் பெயரான் வயிற்றுதித்து,
முருகன் முன்கோ புரத்துய்ந்து,
முந்நாற் றேளில் தந்தையென
முந்நா ளிருந்(து), இந் நாள்பேச்சு

முத்தப் பெயர்த்தாய் வயிற்றுதித்து,
முகம்ஆறுள்ளாற் போற்றி,வண்ணம்
மொழிந்து, மலைமீதுருண்டுய்ந்தாய்!
மூன்று மாயா வினைத்தளையில்
முத்தமடைந்(து)ஆனந்தமுற
முறையே தருக முத்தமே
முதிர்நெற் பணைசூழ் மாதையவிர்
முனிவா தருக முத்தமே.

வி-ம். முந்நீர் - கடல், ஆற்றுநீர் - ஊற்றுநீர் - மழைநீர் மூன்றும் சேர்ந்து முந்நீராயிற்று. முத்தப்பெயராள்-அருணகிரிநாதரின் தாய். தத்தை - கிளி, மலை - திருமலை, முத்தம் - விடுதலை (முத்திப் பேறு) பணை - வயல். 5

## வேறு

**தண்டபாணிக்கடவுள் வடிவில் தண்டபாணியடிகள் எனல்**

கூர்த்தஅயில் கைக்கொண்டு மலைதோறும் ஆடல்புரி
குகனைநாடுந்திறத்தால்
கூடுமவன் உருவமே போலமுழு நீறு,கைக்
குலவு தண்(டு) அக்க மணிகள்
கோர்த்தமையு மாலை,கீள், கோவணம், கல்லாடை
குறைவில்வண் சிகைய விரவே
குளிர்கழற் றுணையினிற் பாதுகைபு னைந்துமிளிர்
கோலமிக நாடி, அன்பர்
பூர்த்திபெறும் உவகையாற் றண்டபாணிப்பெயர்
புகன்றனர், அதற்கிசையவே
புனிதமலி பூசனை புரிந்தன்பில், நாள்தொறும்
போற்றலாயினர், அவர்க்கம்
மூர்த்தியென நின்றருட் சீர்த்திதரு முதல்வனே
முத்தங்கொடுத்தருள்கவே
முருகதாசா! திருப் புகழ்முனிவ!மாதையினில்
முத்தங் கொடுத்தருள்கவே.

வி-ம். "ஐயமின்றித் தெய்வவுருத் தியானிக்கின்றோர். அதன் வடிவமாவார் என்று அறையும் நூல்கள்" என்பது சாரூப நிலை, அம்முறையில் முருக வழிபாடுசெய்த அடிகள் அவ்வடிவுடன் அன்று வாழ்ந்தனர் - பெயரும் அமைந்தனர் அதுமட்டுமல்ல—அவரது திரு

மேனி தங்கிய இடமும் தண்டபாணி மூர்த்தமாய்க் காண்பது சிறப்பு. முருக வழிபாட்டினால் முருகதாசரென்றும், திருப்புகழ் மிகப் புதுமையாய்ப் பாடினமையால், திருப்புகழாரென்றும், வடிவ அமைப்பால், தண்டபாணியென்றும், வண்ணக்கவி மிகப் பாடியமையால், வண்ணச் சரபரென்றும், உலகர் வழங்கலாயினர் ஆதியிலமைந்த, சங்கரலிங்கமென்ற பிள்ளைத் திருநாமம் வழக்காறின்றி மறைந்தது. 6

அடிகள் வாக்கைத் தான் தந்த வாய்மையென முருகன் கூறல்

பொழிநறைஉ குந்துணர்க் கவின்மலித ருந்தருப்
புனர்பொ தும்பர்ச்சி றப்பின்
புதுமையுறும் நெல்லையின் மனைச்சுவரில் அறு
புத்தேள்உ ருப்பொ றித்துக், [முகப்
கழியுவகை யொடுபன் னிரண்டுவேற் படைநன்கு
கவினுறநி றுத்தி, ஓமக்
கனல்ஓம்பி, மணநீர்கொள் கலசங்கள் அமையவே
கனபூசை புரிநா ளில்,வான்
வழியேகும் நாரதன் தோன்றிஅரு கூற்(று)இந்த
வாறளவில் பாடல் நுவல்சீர்
மருவிடச் செய்த(து)ஆர் என,முருகன் நானென்று
மார்புதட் டிப்பக ரும்நன்
மொழிவினை விக்களித் திட்ட அறு புதியாய்
முத்தர் கொடுத்த நள்கவே
முருகதா சப்பெயர்கொள் குரவ!மா தைக்கண்ஒரு
முத்தம் கொடுத்தருள்கவே.

வி-ம். திருநெல்வேலியில், அடிகள் தன் வீட்டின்கீழ் புறப் பார்வையுள்ள சுவரொன்றில் முருகப்பெருமான் திருவுருவைச் செந்நிறவண்ணத்தில் எழுதுவித்தனர் வெள்ளி வேலைச் சாத்தினர்-முன்பக்கம், பன்னிரண்டு தாமிர வேலை நிறுவினர். கலசங்களை வைத்து வழிபாடு செய்துவந்தனர். இரவு உறங்கும்போதும் பெருமான்முன் சிரம்வைத்துப் படுப்பர். அக்கால் ஓர் நாள் நாரதர்வரும் வீணை ஒலிகேட்டது கனவிலும் இயல்பாயுள்ளவாறே படுத்திருந்ததாகத் தோற்றம். வருபவர்க்கு எழுந்து வணக்கம் செய்ய எண்ணம். செயல் நிகழவில்லை-வந்த நாரதர் அடிகள் தலைப்பக்கம் இருந்தனர்! ஏதேனும் செய்தி நடைபெறவேண்டுமல்லவா! அடிகளைப் பார்த்து வினவுவதானர்

நீ இப்படித் தடையின்றிப் பாடுகின்றனையே, இந்த வாக்கு யார் உதவியதென்றனர். அடிகள் பதில் கூறுமுன், ஓவிய முருகன் தன்

வலக்கரத்தால் மார்பைத் தட்டி, குமரகுருபரனை அடியேன்தான் கொடுத்தேன் என்று முக்கால் ஓதினர் என்பதாம். வாக்கேற்றுக் கொண்ட சருக்கத்தில் இவ்விவரம் காண்க. எனவே, தண்டபாணி சுவாமிகளைக் கருவியாகவைத்து முருகனே பாடினரென்பது தெளிவு. "என் மனதில் ஒன்றெண்ண என்கை மற்றொருவண்ணம் எழுதிடும் இயற்கை" என்பதுபோற் பல கூறுகின்றனர். 7

## சந்தக்கவி – திருவரங்கத் திருவாயிரமியற்றல்

**தத்தன தத்தன–தத்தன தத்தன–தத்தன தத்தனனு**

*வித்தகர் நட்புற நிற்கரு துத்தமர்*
*மெய்த்தவம் மிக்குறுவார்*
*வீட்புலம் உற்றசு கத்தைம திப்பதை*
*விட்டரு ளைப்பெறுவார்*

*சித்தச னைச்சம னைப்,பது மத்தில்வ*
*சிப்பவ னைக்,கருதார்*
*சித்தியும் முத்தியும் உற்(று)அழி வற்றசி*
*றப்புறல் சத்தியமால்*

*மைந்தகை பெற்றவு டற்கொள்அ ரிக்குள்உ*
*வப்புமி குத்திடுசீர்*
*வைத்தச கத்திர நற்கவி சொற்றத*
*வப்பொலி வுற்றிடுவாய்*

*முத்தமிழ் செப்புமு ழுப்புல மைக்குரு!*
*முத்தம ளித்தருளே*
*மொய்த்தப சுக்குலம் நத்துப திக்கிறை!*
*முத்தம ளித்தருளே.*

வி-ம் சித்தசன்–மன்மதன், சித்தத்திற் சனிப்பவன் என்பதாம்,

**தாந்த தந்தன தானன தானன-தத்தந் தந்தனறு**

சேண்டொ டுங்கழ காசல-மீதுவ
சிக்குந் தொந்தமொடே
சேந்தன் ஒண்பதர் நாடிடும்-வேதிய
சித்தன் தந்திடவே
வேண்டு கண்டுகொள் வாய்! அரு-ணாசல
வெற்பொன் றுந்ததியே
. வேங்கை யின்றொடர்(பு) ஒவுற-வேள் செய்வி
தத்தின் பண்பறிவாய்
காண்ட குங்கவின் நீடுப-ராசல
கத்தன் றந்திடவே
காண்ப ரங்கிரி தோய்கவி-கூறினே
கைத்தண் டொன்றுடையாய்!
மூண்டி ருந்தவ சாதனை-மேலிட
முத்தந் தந்தருளே
பூங்கி லின்பதி யாய்! திரு-மாதையில்
முத்தந் தந்தருளே.

வி-ம். கழுகுமலைக்கு அடிகள் சென்றனர். அந்த மலைமேல் ஒரு பிராமணத் தவசி ஒருவர் தவமியற்றிவருவதாஞர் தன் உடலின் சூடு தணிய, எவருமறியாமல் பனங்கற்கண்டு வரவழைத்துண்டனர்-பனை சம்பந்தமான அதை உண்பது வைதிகர் மரபன்று. அன்றைய நிலை அது இதை வெளியாக்க முருகன் எண்ணினர். அவர் கனவில் முருகன் தோன்றி, எனது அன்பிஞல் துதிபாடுபவனுக்கு, கற்கண்டில் சிறிது தருக என்றனர் தவசிக்கு தருவதில் தடையில்லை நாளை கீழே இறங்காத நியமமுடையேன் பிறர்வசமனுப்புவதும் முறையன்று. அவர் என்னிடம் வந்தால் தருவேன் என்றிருந்தனர் அடிகள் தவசியிருப்பதைக் கேள்வியுற்றுக் காணுமாறு சென்றனர் தவசி விவரம் கூறியுதவினர் என்பதாம்

திருவண்ணுமலைமீது, ஆசிரமம் அமைத்துச் சில காலம் அடிகள்

திருப்பரங்குன்றுசென்று முருகனை வழிபட்டனர் அன்றிரவு மனக்காட்சியில் முருகன் பெரியபுலவன்போலத் தவவடிவிற்றோன்றினர்-உருவம் ஆடம்பரமாயிருந்ததுகண்ட சுவாமிகள், வெறும் வேடதாரி படிப்பில்லைபோலும் என்றெண்ணினர். "மனத்துள் நின்ற கருத்தன்" அல்லவா முருகன். புலவராகவந்த முருகன்-நீ படித்தவனாயிற்றே "காண்பரங்கிரி" என்று எடுத்து வெண்பா ஒன்று கூறுக என்றனர். அது வெண்டளைக்குதவாது. காரணம், காண்பரங்கிரி என்றால் கூவிளங்கனி என்பது தளை-கவிச்சீர் வெண்பாவிற்கு உதவாது எனவே அளபெடை கூட்டி ஓதினர். "காஅண் பரங்கிரியிற் கந்தா" என்பது எதுகை, தனிச்சீர்கட்கும் அவ்வாறே கூட்டி ஓதினர். கனவிலும் புலமைத்திறம்-பாடுமியல்பு, சாதாரண மக்கட்கியலாது. திருவருள் வயப்பட்டவர்கட்கு ஆகும்.

பின்பு "கோமடந்தை யிதயலயா" என்று பாடக்கூறினர். அது விருத்தநடை. ஆதலின் அம்மகுடம் வைத்துப் பதிகம் பாடினர். இந்நிகழ்ச்சியைத் தாம்பாடிய குருபர தத்துவநூலிற் கூறுகிறார்.

"தடித்து நீண்டவிர் மேனிய னாகித்
தவள நீற்றொடு தந்தை.கண் மணியும்
பிடித்து லர்த்திய காவியங்க கலையும்
பிறங்கச் சத்தியப் பிறங்கலிற் றினமும்
நடித்த வேள்என னுட் கனவினில்வந்தான்
ஞான மின்றிய நாயினேன் அவனைப்
படித்தி லான்கொல்என்று, அலட்சிய மாகப்
பார்த்தி ருந்தனன் பரிந்தவன் உரைப்பான்.

காண்ப ரங்கிரி எனஎடுத் தொருவிண்
கவிசொல் நீதமிழ்க்கல்வியிற் சிறந்த
மாண்ப றிந்திடு வோமெனச் சினந்து
வாது செய்பவர் போல்எதிர் இருந்தான்
ஆண்ப சுஞ்சிகி மீதவிர் கோலம்
அதைநி னைந்துடன் அளபெடை சேர்த்து
வீண்ப டாதருள் தூண்பொரு திரள்தோள்
வேல வாஎன விளம்பினன் அன்றே.

விழித்தும் அக்கவி மறந்ததின்(று) அவன்சொல்
மேய மூன்றசை வெண்டளைப்பிழையும்
கழித்தி ரண்டசை யாப்பிரித் திடிற்கூ
விளத்தின் முன்நிரை காணுறும் கொடிதும்,
விழித்தி றத்தர்சொல் வஞ்சியின் சீரை
வெள்ளை யாச்சொல்என வம்புற என் மனத்தும்
செழித்த மெய்யருள் இருப்பதும் தெரிப்பான்
செபபச்செய்ததும் சிந்தைசெய் தேனே

திருப்பரங்கிரிச் சருக்கம்—கவி 9, 10, 11.

கனவிற்கூறிய வெண்பா.

காஅண் பரங்கிரியிற் கந்தாநின் காதலெல்லாம்
வீஇண் படலாமோ வேலுடனே-தூஉண் அன்ன (தூண் அன்ன)
தோளுந் துலங்கமயிற் றேசைமிசை நீயெதிர்வந்(து)
ஆளுகைக்கீ தேசமய மாம். என்பதாம்

சேண்தொடும் - வானளாவிய, சேந்தன்-முருகன், கண்டு-கற்கண்டு, பராசலம்-திருப்பரங்கிரி, மூங்கிலின்பதி-திருநெல்வேலி. 9

தானன தானன தானன தானன-தத்தந் தந்தனனு

மூடிந னீர்படர் பாசியென் மாலற-முத்தந் தந்தருளே
மூவுல கோருமென் மேன்மைசொல் சீர்பெற-
முத்தந்தந்தருளே
மூடரு மேதகு சீலம்வி ராவல்செய்-முத்தந் தந்தருளே
மோனமெய் ஞானவி னோதச டாதர! முத்தந் தந்தருளே
மோடிசெய் மாதர ரைர்தெரி மாணுற-முத்தந் தந்தருளே
மூதறி வாளர்ப லோர்பணி நாத'மெய்-முத்தந் தந்தருளே
மூடிகன் ஓர்கையின் நீர்முழு கேண்மைய-முத்தந் தந்தருளே
மூவலின் மாதைந லூர்வரு தேசிக-முத்தந் தத்தருளே.

வி-ம். நல்ல தண்ணீரின் தன்மையை அறியவொட்டாமல் மேலே பாசி படர்ந்ததுபோல, அறிவை மூடியுள்ள அறியாமை தீரவும், மூவுலகத்தோரும் புகழும்படியும், அஞ்ஞானிகளைத் திருத்தும்படியும், மோன நிலையில் காணப்பெறும் ஆருதாரப் பொருளானவரே முத்தமருள்வீராக — மேலும் வஞ்சகமாதர்போன்றவர்களும் அறியும்படி அருள் தருதற்கரித்தான அறிஞர் பலர் போற்றும் பெருமானே, முத்தந்தருக. மூடிகம் என்ற ஆகுவாகனரான கணபதிப் பெருமான். பகைஞன் சொல்லி ஏவியபடி செய்யாமல், துதிக்கையின் நீரினல் அருள்மாரியாக விட்டு முழுகப்பெற்ற சிறப்புடையவரே! கெடாத சிறப்புள்ள திருவாமாத்தூரில் விளங்கும் குருநாதரே முத்தமளிப்பீராக—என்பதாம். 10

ஷட் ஆதாரம் என்பது சடாதரமெனத் திரிந்தது, ஷட் என்பது ஆறு என்ற பொருளினது மூஷிகம் என்பது, மூடிகம் என்றுயிற்று. இரண்டும் வடமொழி, ஏண்மை-சிறப்பு.

5-வது முத்தப்பருவம் முற்றிற்று.

பருவம் 5-க்கு கவி 50

## 6-வது, வருகைப்பருவம்

**கண்முன் காண வருமாறழைத்தல் – இதை வாரானைப்பருவ மெனலுமுண்டு.**

### திருவுருவப்பொலிவு கூறுதல்

*காரம் ஏய்ந் திலகும் வெண்ணீறு*
*சாரு மேனி முழுதணிந்து,*
*தவள மலிவெண் கோவணம்கீள்*
*சாத்திக், காவிக் கலைபுனைந்து,*
*சிரம் ஆர்ந் தவிழ்ந்த சிறுசிகை,செந்*
*திலகம் அமைந்த நெற்றி,அருட்*
*சீர்தங் கியகட் கடைநிலவச்,*
*செய்ய முறுவற் கனிவாய், செங்*
*கரம்வாய்ந் தவிர்சின் மயம்,தண்டு,*
*கவின்ஆர் அக்க மணிமார்பம்*
*கவின, நனவிற் பாதுகைதோய்*
*கழல்கள் சூட்டி, இனிப்பிறவா*
*வரம்ஈந் திடஇத் தினம்எனெதிர்*
*வருக! வருக! வருகவே!*
*மாதை நகர்க்கெள மாரகுரு!*
*வருக! வருக! வருகவே.*

வி–ம். திருநீறு வெண்மையாயிருப்பது சிறந்தது. முழுதணிந்து என்பது தாளனமாக முற்றும் பூசுவது - "முழுநீறு பூசிய முனிவர்" என்பது திருத்தொண்டத்தொகை. திரிபுண்டரமாகக் குறித்த இடத்திற் குறித்த அளவில் நீரிற்குழைத்தணிவதன்று. தவளம் – வெண்ணிறம். கோவணம் வெள்ளையாகவே அணிதல் முறை "தூவெளுத்த கோவணத்தை அரையில் ஆர்த்த-கீளானே" திருத்தாண்டகம் - காவி சேர்த்தணிவது கூடாது, கீள் - இடையிற் சுற்றிக் கட்டுவது, கீளல்-கிழித்தல், சிறுசிகை - தோளளவிலமைந்த சிகை, கடை.கடைக்கண் பார்வை. இது சிறப்பு நோக்கமென்பது கருத்து. முறுவல்-குறுநகை, அக்கமணி-உருத்திராக்க மாலை, நனவு-விழிப்பு நிலை. 1

*தொகுத்த பனுவற் றொகையனைத்தும்*
*தொனிநீர்க் கடற்சென் னையிற்றுகற்குச்*
*சூட்டி, உயர்பின் னைத்தமிழ்நூல்*
*தூய புகழ்ச்சீ ரன்பர்செவி*

புகுத்த அரங்கேற் றியசபையிற்
புலவ ெனொருவன் சந்தத்திற்
புரியும் வாதில், அரியவெற்றி
பொருந்தும் பெரியாய்!அசுரர் தமைச்
செகுத்த முருகோற்(கு) அறுமூன் று
திருக்கண் உண்டென் றதைமறுத்தோன்
திடுக்க முறமெய் உரைவிரித்த
செல்வா! வண்ண இலக்கணநூல்
வகுத்த சரதச் சரபவள்ளால்
வருக! வருக! வருகவே
மாதை நகர்க்கெளமாரகுரு!
வருக! வருக! வருகவே.

வி-ம். புலவர்-காஞ்சீபுரம், வித்வான்-சபாபதி முதலியார் பிள்ளைத் தமிழில், "வைகி" என்ற சந்தம் தய்ய என்றமைந்திருந்ததை நெடில் ஐகாரமென்ற அடிப்படையில், மறுத்தனர். சந்தத்தில் ஐயும்' ஔவும், குறிலாயே ஒலிக்கும் என்பது வண்ண இலக்கணம். வய்கி என்றாலும், வைகி என்றாலும் ஒலிப் பேதமில்லை. குமரகுருபரர், "வைதி" என்று ஆண்டிருப்பதைக் காட்டி ஒப்பச் செய்தனர். விவரம் வரலாற்றிற் காண்க.

முருகனுக்கு அருட்கண் பன்னிரண்டும். அனற்கண் ஆறும் உண்டென்பது வடமொழிக்காந்தம். திருச்சிற்றம்பல நாடிகள் திருச்செந்தூர் அவகலினும் அவ்விதம் கூறினர். புதுவையில் சைவ சித்தாந்தியார் பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை தோன்றுமென்பதுகொண்டு வாதிட்டார். சிவனுக்கும், பார்வதிக்கும், கணபதிக்கும் மூன்றுமுண்டானபோது அனற்கண்ணிலிருந்து தோன்றிய முருகனுக்கு ஏனில்லையென்றனர் சுவாமிகள் இதுவரை வண்ணமென்ற சந்தத்துக்கு இலக்கணமேயில்லை. வண்ணத்தியல்பு. என்ற நூலியற்றினரென்பதாம். "தாஅடைட்டித் தனது திறப்பே" என்ற முறைப்படி பதினெட்டென்பதைப் பல நூல்களிற் கூறி நிறுவினர். "திடுக்கமுற" என்பதற்கு மறுத்தவருக்கு மறுமொழி கூற இயலாதபடி கூறினர் என்க. 2

கறங்கு புரையச் சுழலுமனம்
கருதும் உருவ பாவனையில்
கட்டுண்(டு) அநுபூ தியிற்சிறந்தாற்
கவினும் அகளா நுபவமென்னத்
திறங்கொள் தியான அநுபூதித்
திருநூ லிடைநல் விதிவிதித்துத்

தெரித்தாய் வருக! தண்டணிகைச்
செம்மால் வருக! திருவருளாற்
பிறங்குங் கல்வி, செல்வம், அருட்
பேறும் ஞானப் பெருமை, முதல்
பேசும் நலம்தொண் டருக்குதவும்
பெரியோய் வருக! விடமோர்மகட்(கு)
இறங்கும் படிபாட்(டு)அரங்கனெதிர்
இசைத்தாய் வருக! வருகவே
எழில்சேர் நெல்லை மாநகர்க்
கிறைவா வருக! வருகவே.

வி-ம். கறங்கு - காற்றாடி, மனத்துக்குவமை. அவ்வாறு அலையு மனமானது ஒருமுகப்படுதல் வேண்டுமெனில் உருவ பாவனையே ஏற்றது. அவ்வாறு உருவ பாவனையில் மனமொருமைப்படுமாறுல், அருவ அநுபவம்தானே அமையும். தொடக்கத்தில் மனம் அருவ பாவனையில் அமையாதென்ற கருத்தினை, தியாநுநுபூதி நூலின் முதற்கவியில் கூறினர்.

"சித்திமுத்தி யென்னும்இரு பேறும் பெற்றுத்
திரும்பாத வீட்டினிற்போய்ச் சேரு வார்க்குப்
பத்திவைராக் கியஞான மென்னு மூன்றும்
பக்குவமே. அவர்நடக்கும் பாதை தன்னைச்
சத்தியமா யோசிக்கில் "தியானமொன்றே
சகுணமே அதற்கிசைவாம் சார்ந்து நின்றால்
புத்தியினுக் கடங்காநிர்க் குணமுந் தோன்றும்"
பூர்வதவப் பயனில்லார் பொருந்திடாரே" என்பதாம்.

சகுணம்-உருவம் நிர்க்குணம்-அருவம் ஆகும்-திருவரங்கத் திருவாயிரமென்ற நூலைத் திருவரங்கத்தில் அரங்கேற்றிய சமயம். அங்கு முக்கியமாயிருந்த ஒரன்பர் மகனை நாகந்தீண்டிய செய்தியறிந்தனர். உடனே படிப்பதைவிட்டு-அரங்கன்முன் உள்ள பெரிய கெருடாழ்வாரை நோக்கி ஒரு கவியோதி, விடம் நீங்கிலைன்றிப் படிப்பதில்லையென்று கூறி இருப்பிடம் வந்தனர். கருடாச்சாரி என்ற பெயருடன் பகலில் பலரும் காண வைணவ அந்தண வடிவில் தோன்றியருளிய விவரம் வரலாற்றிலறிக. 3

எடுக்க வருக! உரத்திலணைத்
திடற்கு வருக! கருணைமொழி
இசைக்க வருக! பிறந்திறவா
இன்பம் உதவ வருக! முத்தர்

கொடுக்க வருக! தமிழ்ப்பாடல்
கொழிக்க வருக! அடியருடன்
கூட்டி மகிழ்வித் திடவருக!
குளிர்மெய் யன்பர் இனியதுதீ
தொடுக்க வருக! மலர்மாலை
சூட வருக! தூயபதம்
சூட்ட வருக! நெடுநாளாய்ச்
சூழ்ந்து வருந்தும் பவப்பெருநோய்
இடுக்கண் அகற்ற வருக! அருள்
ஈய வருக! வருகவே
எழில்சேர் மாதை நெல்லை நகர்க்
கிறைவா! வருக வருகவே. 4

தெளிதண் பொருநை நதிப்புனலிற்
சேர்ந்தே ஆட வருக! அணித்
திருநீ றணிய வருக! நுதற்
றிலகந் தீட்ட வருக! நிறை
அளிசூழ் மலர்குந் தளச்சடையில்
அணிய வருக! நெல்லையப்பர்
அருட்சீர்க் காந்தி மதியம்மை
அளிர்கோ யிலிற்கே கிடவருக!
குளிர்பா லமுதுண் டிடவருக!
குலவும் விழிக்கு மைதீட்டிக்
கொள்ள வருக! எனப்பெற்ற
கோதை யுடன்நற் செவிலியரா
மிளிர்மூத் தாயர் வேண்டுதொறும்
மேவி யருள்வாய் வருகவே
வியன்சேர் மாதைத் திருப்புகழ்ப்பேர்
மேவு முனிவா! வருகவே.

வி-ம். பொருநை-தாமிரபரணியாறு திருநெல்வேலியில் உள்ளது. நறை-தேன், அளி-வண்டு, குந்தளச்சடை-கூந்தலால் ஆன சடை, " மஞ்சுநிகர் குந்தளமின்னே " என்பது காவடிச்சிந்து. 5

## வேறு—கௌமார சமயக் கருத்து

செந்தகைமலர்த்தவிசில் உறைபிரமன் நான்மறை
தெரிக்கும்மு விருப ஜதியாய்த்
திகழ்மதம் அகண்டாய நிட்களாப ரத்தினிடை
சேர்சத்தி யின்குணமதா

வந்தஔி நிலை,ஒடுக் கிடும்நிலை,முன்என அவை
வயங்கூறத் தருதல், காத்தல்
மனம்அயர வினைவிக் கினம்கெடுத் திடல்,ஞான
வண்மையருள் புரிதல் ஆகும்,
வெந்தகைப் பரிதி,சிவன், உமை,அரி,கணேசன்,அயில்
வேலன்,என ஓது பெயர்கள்
மேவுசா தகர்பற்றி வழிபடக் குருபரன்
விளக்குசோ பானம் என்ன
மந்தமறு மெய்த்தவர்உ ணர்ந்திடஉ ரைத்தபர!
வந்தருள்க !வந்த ருள்கவே
மாவசுவி னம்பரவு மாதையில்வ ருங்குரவ!
வந்தருள்க! வந்த ருள்கவே.

வி-ம். பிரமன் வேதங்களிற்கூறிய ஆறு சமயங்களும், அகண்ட பரத்தின்கண் சேர்ந்துள்ள திருவருட் சத்தியின் குணவகைகளே யாம் அந்தப் பரம்பொருளுக்கு ஆறு குணங்கள் உண்டு அந்த ஆறு குணங்களே ஆறு சமயங்கள் ஆகும். அக்குணங்களாவன, ஒளித்தன்மை ஒடுக்குந்தன்மை, உதவுந்தன்மை, காக்குந்தன்மை, இடையூறகற்றுந்தன்மை. உண்மையுணர்த்துய்தன்மை என்பன. இவற்றுக்குரிய கடவுளாக சூரியன், சிவன், சத்தி திருமால், கணபதி, குமாரன் எனச் சமயம் ஆறுயின, இவை யாவும் முடிவில் ஒன்றே. உபாசகனது மனவிருப்பத்திற்கேற்ப ஒன்றை உறுதியாகப் பற்றி உபாசிக்கவேண்டி, சமயத்தலைவர்களமைத்த படிக்கிரமமே யென்ன கௌமார நூற்கண் விளம்பி விளக்கிய குருநாதரே வருக! வசு - அட்ட வசுக்கள் பூசித்துப் பேறுபெற்ற தலம் திருவாமாத்தூர் என்பது, தலச்சிறப்பு. வரும் என்றது, அத்தலத்தில் விளங்கும் சிறப்பு உடையவர் என்பதாம், மா-மாண்புடைய. 6

## பாறைக்கிணற்றின் தத்துவம்

உலகத்தில் உளமனிதர் உளம்இத்த ரையில் வலிமை
உறுபாறை அனைய(து) அதனை
உயர்தமிழ்க் கவியெனும் படையால் உடைத்(து)அரு
ளொள் அழல்கொ டும்பெ யர்த்து [ளென்
நலமிக்க கருணைசத் தியர்,ஈகை, அன்புநீர்
நதிமே லெழுந்து பொங்கி
ஞானம்வை ராகமெனும் நற்பயிர்செ ழித்து,மல
நவையில்கதி யாம்ப யன்உற

வலமிக்க அயிலுற்ற கரன்மெய்க்கண் அருள்பெற்று
மகியிற்செய் திடல்நத்துசீர்
வசமனம்இ லார்களும் கண்டுபல வாறுசொல
வன்கலிற் கிணறெ டுத்து
மலர்துற்ற பதமுருகன் விரதத்தில் உறும்இறைவ!
வருகநனி வருக அருகே
வண்டலுற் றவிர்மாதை ஒண்டிருப் புகழ்நாத
வருகநனி வருக அருகே.

வி-ம். திருநெல்வேலியில் நந்தவனத்துக்கு நீர் இறைக்க வேண்டி - தமது மனையிற் கிணறெடுக்கலாயினர் தொடக்கமுதல் இறுதிவரை பாறையாயிற்று சிறிதளவே நீர் கண்டது அதில் பேருற்றுவரும்வரை அரிசியாலான உணவுண்பதில்லையெனக் கடும் நோன்புகொண்டனர் அது உலகமக்கள் மனம் வறண்ட பாறை ஒப்பது. அதில் அன்பு நீர் எய்தி, வீடுபேறுண பயனெய்தமுடியாமல் உள்ளது என்பதை விளக்குமுறையிலிருந்தது என்பதாம். 7

சந்தம்

தந்தந்த தத்ததன-தந்தந்த தத்ததன
தந்தந்த தத்ததன-தனதன

கண்டென்ற சொற்கிளிவி-னம்புந்தி றத்திநெடு
கன்றுஞ் சலிப்பறஉன் வடிவையே
கண்கொண்ட நற்றெரிச-னங்கண்டு ளத்(து)உவகை
கங்கின்றி யுற்றிடும்ந-லவர்பலோர்
வண்டொன்றும் நற்பலவி-யன்கந்த புட்பவகை
மண்டன்பொ டர்ச்சனைசெய்-தளவில்சீர்
மண்கண்ட மத்தியில-மைந்தண்டர் பற்றரிய
வண்பண்பின் மெய்க்கதிஎய்-திடல்செய்வாய்
தொண்டொன்று மெய்த்தவர்க-ணந்தங்கி டக்கொள்புகழ்
துன்றுஞ்சி றப்பருணை-நகரில்மா
துங்கர்ப டைத்தரிய கந்தன்பு யத்திலவிர்
சொந்தன்கி ளித்தவனை-கலையுளாய்
தண்டொன்று கைப்பரம-ஒண்செந்த மிழ்த்தலைவ
சந்தந்து லக்கிறைவ-வருகவே
சம்பந்தர் அப்பரொடு-வன்றொண்டர் சொற்றொடை
தண்பம்பை நற்பதியன்-வருகவே. [கொள்

வி-ம் கண்டு-கற்கண்டு. கங்கு-எல்லை கந்தபுட்பம்-மணமுள்ள மலர்கள், மண்டு அன்பு-நிறைந்த பேரன்பு. மண்கண்டம் இவ்வுலகம், கிளித்தவன் - அருணகிரிநாதர், வன்றொண்டர் - சுந்தரர். 8

## நெடுங்குள நிகழ்ச்சி

**தனதன தந்தன—தனதன தந்தன**
**தனதன தந்தன—தனதனு**

அணிகொள் நெடுங்குளம்—எனும்நக ரந்தனில்
அமைதரும் அந்தணர்—மரபிலே
அவிர்ஓர்சு மங்கல—மகள்உன்அ ரும்பசி
அகலமி குஞ்சுவை—அமுதிடா
எணியுத வும்பொருள்—விழைகில தென்றனுள்
இலதும்ஐ யந்தவிர்—எனவிள்கால்
இனிதுசொல் கென்றுபின்—உலகுயிர் துன்பற
இதமுயல் பண்பற—வடிவமே
கணிதமிழ் புன்பிற—வியில்வர லின்றிய
கதிஇறை வன்றரு—பயனுள்மேல்
கருதிஅ றிந்திடு—கெனவிடை விண்டொரு
கனியும்வி ளம்பருள்—மலிபரா
மணிவட முஞ்பொடி—மிகையும் இலங்கஎன்
மனமலர் தங்கினை—வருகவே
மறைசொல்ம தங்கனெ(டு)—எழுவர்முன் உய்ந்
வளநகர் தங்கினை—வருகவே [திடும்

வி-ம் செட்டி நாட்டுப் பகுதியில் உள்ள நெடுங்குளமென்ற பதியிற் சென்றபோது, உச்சிநேரம். தன்வழிபாடாதியானமூடித்து உணவுகருதி அந்தணர் இல்லந்தேடிச் சென்றனர் அடிகள். வீதியில் நான்கே மனைகள் வடக்குநோக்கியிருந்தன. வீதி வழியே நாடிச்சென்ற இவரைச் சில இளவயதுள்ள அந்தணச் சிறுவர்கள் திருவேடங்கண்டு பரிகசித்தனர். ஒருவீட்டின்கண். மற்றொரு இல்லம் பூட்டிட்டு இருந்தது. மற்றொன்றில் அவ்வில்லத்தாள் மகப்பெறும் வேதனையில் வருவோரும் போவோரும் கண்கலங்கியிருந்தனர். இம்மூன்றையும் பார்த்து ஒவ்வாமையினல் நான்காம் வீட்டை நாடினர். அதுசமயம் அந்த வீட்டம்மை வெளியே வரலானள். அவள் இதுவரை யாரும் உணவுக்கு வரவில்லையே என்றெண்ணி வருவதும், அடிகள் நோக்கியது தெய்விகமாயிருந்தது.

அதுமட்டுமல்ல. அவ்வம்மை சுவாமீ என்ன பார்க்கின்றீர்கள் என்ருள். இவ்வேளைக்கான உணவு தேடி வந்தேன் என்றனர் சுவாமிகள். வருகஎன்றழைத்து. அன்புடன் உணவிட்டனள். இருந்த நேரம்-உள்ள சூழ்நிலை, அம்மையின் ஆதரவு பெரிதும் மகிழ்வூட்டியது உணவும் நலமாயிருந்தது உண்டபின். இலவசமாக உண்ண விரும்பார் அடிகள். அதற்கான தொகை உதவமுயன்றனர். அம்மை பார் சுவாமீ பொருள்பெற உணவிடவில்லை என் கணவர் இப்படி

கட்டளைப்படி செய்தேன் என்றனள். இக்காலத்தும் இத்தகையர் உளரோ என வியந்து விடை கேட்டனர், அம்மை கூறுவாள்.

சுவாமீ எனமனதில் இரண்டு ஐயமுளது. அதைத்தீர்த்துச்செல்க என்றனள். இறைவன் என் அறிவில் விளக்கியதாயின் கூறுவேன் யாது என்றனர்? உலகில் அறம் என்பதன் உட்கருத்தென்ன? இறைவனிடம் உயிர் பெறவேண்டியது யாது? என்றலும், சுவாமிகள் பெருவியப்பெய்திக் கூறுவதாயினர். தன்னுயிர்போல எல்லா உயிரையும் நோக்குவதே அறத்தின் உண்மை வடிவம். மற்றும் பிறவாமல் இறைவனுடன் ஒன்றுபடும் முத்தியே பெறவேண்டியது என்றனர். அம்மையார் கேட்டு உவப்புடன் விடையுதவினர் என்பதாம்.

"நெடுங்குளத்திற் பார்ப்பதியை நேராம்ஓர் அம்மை
கொடும்பசியைத் தீர்க்கும் குணத்தாள் — இடும்பரிசு
வேண்டாதாள். உண்மை விவேகம் மிகவுடையாள்
ஆண்டானருளே அவள்" என்பது கவி.

"பார்ப்பதியைநேராம் அம்மை - ஆண்டானருளே அவள்" எனக்கூறிய அருமையும் பெருமையும் எண்ணி எண்ணிச் சிந்திக்கவுள்ள தவாநுபூதி மதங்கர் பூசித்த சிறப்பு தல விசேடம் ஏழு சீடருடன் வீடுபேறடைந்த மேன்மையது ஆமாத்தூர் 9

தனன தனன—தனன தனன—தனன தனன—தனதன,

சகள அகள விபவ மருவு
சரதன் வருக வருகவே!
தகைகொள் அமயர் இதய மருவு
சரணன் வருக வருகவே!
நிகரில் அறுசமயமும் விழையும்
நிபுணன் வருக வருகவே!
நினையும் அடியர் நிகள வினைகொய்
நிமலன் வருக வருகவே!
பகலொடிரவு கழிஅநுபவ
பவிதன் வருக வருகவே!
படிறில் கவிகள் நுவலொர் இனிய
பரமன் வருக வருகவே!
துகளில் கருணை மலியும் விதிகொள்
சுகுணன் வருக வருகவே!
சுரபி அருள்முன் மருவு பதிகொள்
சுகிர்தன் வருக வருகவே!

வி—ம். சகள - உருவ வழிபாடும், அகள - அருவ அநுபவமும் கொண்ட, விபவம்-மேன்மையுடைய சரதன் - உண்மையுடையவர். நிகளவினை - விலங்குபோன்ற இருவினை. நிமலன் - மலமற்றவர். படிறு இல்-குற்றமற்ற, சுரபி-பசுக்கள் வழிபட்ட தலம் என்பதாம். 10

வருகைப்பருவம் முற்றிற்று.

ஆகப்பருவம் 6-க்கு கவி—60

# 7-வது, அம்புலிப்பருவம்

சந்திரனை விளையாட வருமாறு அழைத்தல். இதில், தலைவனுடன் ஒப்பான பொருளும், வேறுபட்ட உயர்வு தாழ்வும், வந்தால் உதவிபெறலாமென்பதும், வராவிடின் ஒறுத்தல் பெறுவாயென்பதுமான, சாம-பேத-தான-தண்டம் என்ற நான்கு வகையிற் கூறுவது மரபு-அம்முறையிதற்குமுண்டு.

1–சாமம்–சமம், ஒப்புமைப்பொருள்.

காவிவிழை யுந்தகைமை யுறுவதால், சிவபிரான்
கண்மணிச் சீர் இசைந்த
காட்சியால், கனமருவு சிகரியின்மு கட்டுறும்
காரணத் தால்,பாண்டியில்
மேவிறைவர் விழையுநற் பிறவிகொண் டிடுதலால்,
விண்டுவாம் பதிவி ழைதலால்,
மேதினியு ளோரன்பு புரிமகிமை மருவலால்,
மேனியினில் மான்மு யங்கும்
மாவியன் குறியினுல், புலவர்விழை வால்,எமதுள்
வளர்தண்ட பாணிமுனியை
மானுவாய்! ஆதலால் இவன்மகிழ் வின் விளையாட
வாஞ்சை கொண் டுனைய ழைத்தான்
ஆவினுரி மைக்கரிய னும்நெல்லை யாளியுடன்
அம்புலீ ஆடவாவே
ஆனேறும் அரன்மருவும் ஆமாதை நகரினினி(து)
அம்புலீ ஆடவாவே.

| தலைவன் பகுதி | சந்திரன் பகுதி |
|---|---|
| காவிவிழைதல்-கல்லாடையணிதல். | காவிவிழைதல்-நீலோற்பல மலர்தல், |
| சிவன் கண்மணி-உருத்திராக்கம பூணல். | சிவன் கண்மணி-சிவன் கண் ஒன்ருதல். |
| சிகரி முகட்டுறுதல்-திருமலை உச்சியில் மீது ஏறிநிற்றல் | சிகரி முகட்டுறுதல்-உதயகிரியின் மீது காண வருதல். |
| பாண்டியிறைவர் விரும்பும்பிறவி- | பாண்டிமன்னர் மரபு-சந்திர மரபு |

| | |
|---|---|
| விண்டு விரும்புதல்-தமிழார்வத்தினால் திருமால் விரும்புதல் | விண்டு-திருமால் மார்பில் சந்திரன் இருப்பதான செய்தி. |
| மேதினியோர் அன்பு-உலகினர் பணிதல். | மேதினியோர் அன்பு-சந்திர ஒளிக்கு உவகை. |
| மேனியில் மால் முயங்கல்-தனது திருமேனியில், வடகலை, தென்கலை நாமமிடுதல். | மேனியினில் மான் முயங்கல்-சந்திரனது மத்தியில் காணும் களங்கம். |

மானுவாய்-ஒப்பாவாய், ஆவின் உரிமை-பசுக்காத்தலின் பேராவல். நெல்லையாளி-திருநெல்வேலியிற் பிறந்தவர். ஆன்-இடபம். 1

இருளைத்த விர்த்தொளிப ரப்பிஅறி ஞர்கள்மகிழ
இன்புதவு கின்ற பண்பால்,
இசைமிகுந் தவளநிற மேனியுற் றிடுதலால்,
எழில்வேள் உவக்கும் உயர்வால்,
மருளைத்த ருங்கொடிய வெப்பம்அக லச்செய்து
வண்மைபெறு தண்மை தரலால்,
வருமெயன் பர்க்கறிவில் ஊறமுதம் எந்நாளும்
வாய்ந்திடத் தருமாட்சியால்,
தெருளைச்செ யும்பரிதி யுடனென்று சேர்தலால்,
தெளிதமிழ்ப் புலவர் மெச்சும்
செய்யகவி யிடைநிலவு சீர்த்தியால், இணையான
செய்கைதேர்ந் துணைய மைத்தான்
அருளைப்பொ ருந்தும்வண் ணச்சரப குரவனுடன்
அம்புலீ ஆடவாவே.
அவிர்விருந் தச்சிலைகொள் பதியுடைச் சற்குரு
அம்புலீ ஆடவாவே, [வொ(ந)

| தலைவன் பகுதி | சந்திரன் பகுதி |
|---|---|
| இருளை நீக்கி ஒளிதருதல் - அஞ்ஞான மயக்கத்தை அகற்றி ஞானமுதவல் | இருளை நீக்கி ஒளிதருதல் – உலகின் இரவு வேளையில் ஒளியுதவுதல். |
| தவளநிறம்-திருநீற்றுப் பூச்சினாலான வெள்ளை. | தவளநிறம்-வெள்ளையான நிலவினால், |
| வேள் உவத்தில்-முருகன் | வேள் உவத்தல்-குடையா |

| | |
|---|---|
| அன்பர்க்கு இன்பு தருதல்-அடிய வரை ஆண்டு பேரின்ப வீடருளுதல். | அன்பர்க்கு இன்புதவல்-உபா சனையோர்கட்கு அமுதம் ஊறச்செய்தல். |
| பரிதியுடன் சேர்தல்-சூரியகலை, சந்திரகலை ஒன்றுபட்ட சுழி முனை அநுபவம். | பரிதியுடன் சேர்தல், சூரிய ஒளி யில் ஒன்றுபட்டு, அமாவாசை யாதல் |
| புலவர் புகழ்தல்-துதித்து வழி பாடு செய்தல். | புலவர் புகழ்தல்-தேவர்கள் புகழ இருத்தல். |

தவளம்-வெள்ளை நிறம், வேள்-மன்மதன்-முருகன், மருள்-மயக்கம். வெப்பம்-வெய்யிலால், பாசபந்தத்தால் ஆனவை தெருள்-தெளிவு. விருத்தச்சிலை-வட்டமான கல், இது உண்மையறிவித்து நீதி தருவதாக, திருவாமாத்தூரிலிருந்தது. கலிக்கொடிதால் மறைந்ததென்பர். 2

## 'பேதம் – வேறுபடுத்திக் கூறுதல்

*அம்பல்சொற் றிடமகளிர் பலரைத்து யர்ப்படல்செய்*
*அசடன்நீ, இவன்மி னார்கண்*
*அனைவரும்நன் மங்களசுகத்துடன்விளங்கு தற்(கு)*
*ஆனநன் நெறிசொல் பெரியோன்,*
*செம்பதும நாயகற் காணில்மங் கிடுவைநீ*
*சீரடியர் அதன நிவினிற்*
*சிந்தனைசெ யத்திகழ்ந் தின்பம்இவன் ஈகுவான்,*
*தீயஅவு ணர்க்க டங்கிக்*
*கம்பலையெய் துவைநீ, இரக்கமில் அரக்கர்கட்*
*கறுவிடுந் தீரன் இவன், நீ*
*கால்கொடுசி வன்தக்கன் வேள்வியிற் றேய்க்கக்*
*கசங்கினை, இவன், தில்லையூர்*
*அம்பலத் தரியசிற் றுண்டிகொண் டோன்,உணர்ந்(து)*
*அம்புலீ ஆடவாவே*
*ஆவற்ற நர்பரமர் மாதைப்பெ ருங்குருவொ(டு)*
*அம்புலீ ஆடவாவே.*

வ-ம். மகளிர் கணவரைப் பிரிந்தபோது நிலவொளி துயர்செய்யும். பதுமநாயகன் - சூரியன், சூரிய வட்டத்துள் குரு வடிவைத் தியானிப்பது சிறப்பு. கம்பலை-துயரம். தக்கன்செய்த வேள்வியில், வீரபத்திரர் சந்திரனைக் காலால் தேய்த்தனர் என்பது கந்தபுராண வரலாறு சிதம்பரத்தில், வழிபட்ட முடிவில் உச்சிக்காலப் பிரசாதம்'

அப்பம், முருக்குவகை வலிந்து அருச்சகர் வழங்கியது. இவ்விபரம் சுவாமிகள் வரலாற்றில் உள்ளது. 3

ஷை

கலையோர் பனிறுகொண்(டு) அதுவும்ஒரு நிலையினிற்
கவினலின் றிக்குறைந்து
கழறும்ஒரு நாளில்முற் றும்தேய்வை நீ, இவன்
காசினியு ளோர்கள் மகிழ
நிலைமேவு பதினறு, முப்பத்தி ரண்டுடன்
நிகரில்அறு பத்து நான்கா
நிலவுகலை பெறுசந்த வண்ணப்பெ ருங்கவிகள்
நீள்நிலத் திலக வைத்தோன்
சிலையாய கழையுடன் கிள்ளைவிழை வேள்குடைச்
சிறுமையுடை யாய்நீ, இவன்
திருப்புகழ்க் கிள்ளைவிழை வேள்குடைத் திரு
சேவையுடை யான்,அறிகுவாய் [நடச்
அலையார்பு னற்பார்பை மாதைநக ராளியுடன்
அம்புலீ ஆடவாவே
அன்னையொடு தந்தைகுரு தெய்வமென நின்றவ
அம்புலீ ஆடவாவே. [னொடு

வி-ம். சந்திரன் பதினறு கலையுடையவன். அவை என்றும் ஒருவிதமாயிருப்பதுமில்லை. ஒவ்வொன்ருய்க் கூடிப் பதினருகும். உடனே ஒவ்வொன்ருகக் குறைந்து ஒருநாள் இல்லாமலே (அமாவாசையன்று) மறையும் இயல்பினது.

அடிகள்-பதினறு, முப்பத்திரண்டு, அறுபத்துநான்கு கலைகளையுடைய சந்தப்பாடல்கள் பல பாடி உலகில் அன்பர் படித்து மகிழப் பாடியவர். இதுவரை அவ்வாறு எவரும் பாடவில்லை கருவேளான மன்மதன் கரும்பு வில்லுடையவன், கிளியை வாகனமாயுடையவன், அவனுக்குக் குடையாயிருப்பவன் சந்திரனுவான்.

சுவாமிகள், திருப்புகழ் பாடிய அருணகிரிநாதரான கிளியை விரும்பியேற்று, குடைக்கூத்தியற்றும் முருகவேளின் திருக்காட்சி கண்டவர் என்பதாம். 4

ஷை

இமையவரு டன்றிகழ்ந்(து) அந்தணர்செய் கொலைவேள்வி
யினில்அவியை ஏற்றி டுவைநீ
இவன்வேதன் முதல்மூவர் ஒதிரும் புலைமகத்
தினைஅணுவும் ஒப்பி டாதான்

குழைதலுற் றநுதினமும் வாசவற் பணிவை நீ,
சுதிரைஒரு நூறு மடியக்
கொன்றஅறி வீனனென் பலனிவன், பணிகள் உட்
கொண்டுமிழ்ந் திடும்ளச் சில்நீ
சிலையமுற் றிலும்நடித் திடுசக்கக் கடவுள் இவர்
செஞ்சிகிப் பரியை மாயன்
செங்கலுழ னைத்துதித் தன்பர்விட பீடையைத்
தீர்த்தருள வல்லன் இவனும்!
அமைவனத் திடைநிலவி அவிர்திருப் புகழ்முனியொ(டு)
அம்புலீ ஆடவாவே
அணிநிலவு மாதைநகர் அருள்முருக தாசனுடன்
அம்புலீ ஆடவாவே.

வி-ம் அவி-யாகத்தில் இடும் ஊன், இது தேவர்களுக்கென இடுவது. பிரமன், திருமால், உருத்திரனென்பார் வேள்விக் கொலை பாவமன்று என நேரே வந்து கூறினும் ஒப்பாத கருணையுடையவர் சுவாமிகள். வாசவன்-இந்திரன். அவனை வணங்குதல் தேவராசன் என்றற்பொருட்டு அடிகள். நூறு குதிரையைக்கொன்று அசுவமேத வேள்விசெய்தவனை மட்டி என இகழ்வர். "வானவலாரியை நூறசு வங்கொலும் மட்டி எனு இகழ்வேன்" என்பதாலறியலாம். பணிகள்-இராகு-கேதுக்களான இருநாகங்கள் உண்டு உமிழ்வதென்பது கிர கண வரலாறு திருவரங்கத்தில் விடபீடை நீக்குதல் ஆதியன சுவாமிகள் அருட்செயல். கலுழன்-கருடன், அமைவனம்-மூங்கிற் காடு (திருநெல்வேலியின் பழைய வரலாறு). 5

## தானம் – உதவிபெறலாமெனல் (வேறு)

சங்கை தவிர்பல் பசுக்குழுவின்
தலையாய், நந்தி தவர்புரிகால்
நகைதோய் கோடு கரக்கருதித்
தான்ஊர்ந் திடுமோர் விமானமதைத்
கொங்கை யுமைபங் கன்தயையாற்
கொடுக்கப் பெற்றுள் ளாய்,அதன்றிக்
குளிருங் குமுத வதிவாவி
குலவும் பதிஆ தலிற்,சலச
மங்கை வதியும் மாதைநிற்கு
வாய்ந்த பொருத்தம் உள(து) இந்நாள்
வந்தால் இவனால் வேறு நலம்
வாய்க்கும்,வினை மறுத் தொதுங்கேல்

அங்கைக் குறியோன் அழைப்பதுணர்ந்து
ஆட வருவாய் அம்புலியே
அருள்சேர் தண்டக் கரமுனியோ(டு)
ஆட வருவாய் அம்புலியே.

வி-ம். பசுக்கள் ஒன்றுகூடித் திருவாமாத்தூரில், கொம்பு வேண்டித் தவமிருந்தன. அவற்றின் தலைமையாக நந்தி தேவரும் இனம்பற்றித் தவமியற்றலானார். கயிலையில் காவலின்றிக் கூட்டம் உள்ளே சென்றது. இறைவன் நந்திக்குக் காட்சி தரவேண்டும். விமானமொன்றில் வந்தருளினர். பின் நந்தி விடையிற் சென்றார். அந்த விமானம் சந்திரனுக்கு உதவப்பெற்றதென்பது தல வரலாறு

குமுதவதி - என்ற திருக்குளம் ஆமாத்தூரில் உள்ளது. அது சந்திரனுக்குரிய மலர். எனவே ஊர்ப்பொருத்தம், உதவிபெற்ற சிறப்புளது, எனவே வருக என்றதாம். அங்கைக்குறி-இடக்கையிற் கொண்ட சின்மயம் "ஆம்பலம் பூம்பொய்கை" என்பது தேவாரம். 6

திங்கட் குழவி, பிள்ளைமதி,
தேயு மதி,வெண் மதி,எனல்போற்
செப்புன் பெயர்கொள் பொருட்சிறுமை
தீரப் பெறலாம், நேனுவளர்
அங்கற் பகநாட் டினிற்சுரர் உண்
அமுதச் சுவையும் கசப்ப வண்ண
அணிச்செந் தமிழின் சுவையமுதுண்(டு)
ஆர்வம் உறலாம், இருட்களங்கம்
அங்கத் தொழியக் கவுமார
ஆட்சி கொளலாம், அரியதிரு
அருள்நாட் டப்பேர் நூல்வயின்முன்
அறையும் பதிகம் தெரிந்திலேயோ
அங்கட் புவியி லழைப்பதுணர்(ந்து)
ஆட வருவாய் அம்புலியே
அணியார் மாதைச் சரபனுடன்
ஆட வருவாய் அம்புலியே.

வி-ம் அம்கற்பகநாடு-அழகிய வானுலகம், சுரர்-தேவர், இருட் களங்கம்-சந்திரனுட் காணப்படும் கறுப்பு-அம்கட்புவி - அழகிய விரிந்த நிலவுலகம்.

**சந்தம்-வேறு, தண்டம்-வராவிடின் ஒறுக்கப்பெறுவாயெனல்.**

**அதற்கான சான்று கூறி விளக்குதல்.**

**தனதன தனனு-தனதனதனனு-தந்தா தந்ததனு**

அலைகட லிடைவே லொடுதமி ழுறும்ஏ-(டு)
அன்றே யும்படியே
அதிசின முருகோன் மிசைகொடு விடும்நீர்
அந்தோ கண்டிலையோ
மலைதனில் உடல்கீழ் உறவருள் வகைசேர்
வம்பியான் வேண்டிலனே
மனதினில் முரணும் இழிகுணம் உறில்யார்
வண்சீர் கண்டிடுவார் ?
நிலைபெறு சுகவாழ் வுடனுற விழைசீர்
நெஞ்சூ டொன்றிலையேல்
நிறைமதி பெறுவாய்! குறைமதி கொளலேன்!
நின்சீர் மிஞ்சிடவே
மலைவக மருவா(து) அதிசிரை வுடனே
வந்தா டம்புலியே
வசைதவிர் திருமா தைகொள்குரு பரனோர்
வந்தா டம்புலியே.

வி-ம். திருச்செந்தூரில், முருகன் அருள்புரிவதாகக் கூறியபடி நடவாமையால், தன் வழிபாட்டுக்குரிய வேற்படையை, தண்டாயுதத்தை ஒடித்தும், திருநீற்றுப் பையையும் - தமிழ்ப்பாடலமைந்த ஏட்டையும் கடலில் வீசியெறிந்தனர். கடலில் விழுந்து உயிர்விட எண்ணிய சமயம் ஒரு காட்சி கண்டு அமைதியுற்றனர். இவ்வாறே திருமலையிலேறி உருண்டு உடல் ஊனமின்றி வந்தனர். இப்படி முருகன் மீதே சினப்படுபவர் அடிகள் நீ எம்மாத்திரம். வருக எனல்.

நீர்-குணம் மலைவு அகம் மருவாது எப்படிப் போவதென் றெண்ணுமல் என்பதாம். இதுவரை எவ்விதமான பழிக்கும் இடமில்லாதிருந்த திருவாமாத்தூருக்கு, உன்னால் ஒரு பழி வராமற் செய்வாயாக என்பது கருத்து. 8

**டி எடுத்துக்காட்டு.**

**தனதந் தத்தன-தனதந் தத்தன-தானு தந்தனனு.**

துகளின் றிப்பலர் புரியுந் துத்திய
சோபா னர்புனைகோ
துமிசர் பட்டியில் உயிர்கொன் றுற்றதொர்
சோகால் அங்கோருசேய்

அகடொன் றப்புரி பிணிமங் கித்தளி
ஆகா யம்படவே
அறியும் பெட்புற அதிநுங் கக்கவி-
யாலே கண்டனர்காண்!
இகமெங் குற்றவர் களும்நம் பித்தொழல்
ஏன்நீ கண்டிலேயோ
இசைகந் தப்பரன் உயர்தொண் டுற்றவர்
ஏய்கோ பம்கொடுத்தே
மகரந் தப்புது மலர்நெஞ் சத்தன்முன்
வாவா அம்புலியே
மனமொன் றிப்பசு வினம்நம் புஅப்பதி
வாவா அம்புலியே.

வி-ம் அடிகள் பழனிக்கு வரும் இடைவழியில், துமிசம்பட்டி யென்ற பதியில் ஓர் நாள் தங்கினர். அப்படியிருந்த இடத்தினருகில், ஒருவன் ஆடு ஒன்றைப்பற்றி யிழுப்பதையும், அது கதறுவதையும் பலர் சூழ நின்றிருப்பதையும் கண்டு, ஓடிவந்தனர் ஏன். இதைக் கொல்லப்போகிருயென்றனர். அவன் அடியாரன்புடையவன். சுவாமீ! என் மகனுக்கு வயிற்றுவலி நீங்கவில்லை. இந்தச் சந்நாசப்பனுக்கு வேண்டினேன் வலி நின்றது. நல்ல வரப்பிரசாதமான தெய்வம். எனவே என் வேண்டுதற்படி-ஆடு பலியிடப்போகிறேன் என்முன் அடிகள், நான் பேசும் சந்நாசியப்பன் பேசாத சந்நாசப்பனுக்கென ஆட்டைக்கொல்ல விடமாட்டேன். மற்றுள்ளவற்றைவைத்து வழிபாடு செய்யென்றனர். சரியென்று நடத்தத் துவக்கினன்

உடனே பையன் வலி தாளாமல் கதறினன். அவன் பார்த்தீர்களா? இது சொன்னபடி செய்யாவிட்டால் தீங்கு வருமென்றேனே. இப்போது என் செய்வதென்முன். சுவாமிகள், உன் மகன் வலியைப் போக்குவது என் கடமை. பொறு என்றோதி, தன் பூசையிலிருந்த நீரைத் தெளித்து, திருநீற்றைப் பூசச்செய்து, பிரம்பினுல் தடவி ஓர் பாட்டோதினர் வலி நின்றது. அந்தச் சந்நாசப்பன் கோயிலும் பாழ்பட்டது, பேயும் ஓடியது

அயிற்றலேவா தென்பழனி அப்பா!இச் சேய்தன்
வயிற்றுவலி முற்றுமற மாற்றி—வெயிற்புழுப்போன்(று)
ஏழைகள்வா டப்படுத்தும் இப்பேய் உயிர்குடித்திட்டு
ஊழையென்றோர் உண்டென் றுணர்த்து. என்பது பாடல்.

வாராதிருப்பின் அப்பேய்போல, நீயும் மறைந்தொழிவாயென்பது அறவுரை.

துகள்-குற்றம், துத்தியம் - தோத்திரம், சோபானம் - படிகள், சோகு-பேய், அகடு-வயிறு, பிணி-வயிற்றுவலி, ஆகாயம்பட-வெட்ட வெளியாய் ஒழியும்படி. துங்கக்கவி-வெற்றியுள்ள பாடல், மகரந்தம்-பூவிலுள்ள நுண் துகள். 9

## அச்சுறுத்தல்

தானன தானன-தானன தானன-தானு தந்தனு

மாதவர் சேகரன் நேர்வெகு
ளாமுனம் வாவா அம்புலியே
வானிரு பானெழு மாதர்அ
ழாவகை வாவா அம்புலியே
வாதனை தீர்பர ஞானவி
லாசன்முன் வாவா அம்புலியே
வாசவன் ஊர்பொறு சீரும்வெஃ
கானிடம் வாவா அம்புலியே
வாதமி லாதவெகை மாரர்பி
ராவெதிர் வாவா அம்புலியே
வான்வரை நீள்கழை தோய்நக
ரான்வசம் வாவா அம்புலியே
மாதயை யாலுனை நாடினன்,
ஆதலின் வாவா அம்புலியே
வாரண மாமுகன் நேடிய
மாதையில் வாவா அம்புலியே.

வி-ம். மாதவர் சேகரன்-அடியவர் கூட்டமுடையவன் - வான் வானில் நட்சத்திர வடிவாயுள்ள, இருபான் எழுமாதர் - இருபத்தே ... ன் மனைவிமார்கள், அழாவகை-அழாதபடி, (நீ வராமைகரு

## 8-வது, சிற்றிற்பருவம்

சிறுமகளிர் சிறு வீடுகட்டி விளையாடுவர். சிறுவர் அதை அழித்து மகிழ்வர். அவ்வாறு செய்யாதே என வேண்டும் முறையிற் பாடுவது. சிறுவீடு-சிறியவீடு, உடல்-சிறிய வீடு உயிர் வாழ்க்கைக்கு ஆதரவானது. எனவே இதை அழிக்காதே என்பதுமாம்.

*பன்னு ளாகத் தவமிழைத்த*
*பயனாற் பதுமன் எழுதும்விதிப்*
*படிவாய்த் தது,நற் றெண்ணீராற்*
*பாங்கு பெறச்சுத் தம்புரிந்து*
*நன்னு னந்சாந் தால்மெழுகி*
*நயவெண் ணீறு மிகப்பூசி*
*நல்ல கோலம் புனைந்துன்றன்*
*நளினத் திருத்தாள் ஊன்றுதற்காம்*
*பொன்னு னுறும்பொற் றவிசுண்டு*
*போற்றி மகிழும் பொருளுண்டு*
*புலவர் பலரும் புகழஉள்ளிற்*
*பொருந்தி விளையாட் டியற்றுமல்*
*தென்னாட் டணியாம் நெல்லைநகர்ச்*
*செல்வா, சிற்றிற் சிதையேலே*
*திருவா ழ்மாதைப் பதிக்கரவா!*
*சிறியேம் சிற்றிற் சிதையேலே.*

வி-ம். உடல்பலமுன்னைத் தவத்தால்- பிரமனாற் றரப்பட்டது. வீடும் நலமுறப் பெறுவது முன்னைந் தவப்பயனென்பர். 'பசு - பத்தினி, சுதன் ஆலயா' என்பதறியலாம் நன்நானச்சாந்து-உயர்ந்த கத்தூரிச் சந்தனத்தால் மெழுகி-வெண்ணீறு பூசப்பெற்று, கோலம்-அழகு செய்யப்பெற்றுள்ளது வீடு - உ. [illegible]

கொத்திப்'' பறவைக் கொடியுடையாய்!
குளிர்செந் தமிழ்ப்பாப் பொழிமுகிலே!
கொல்லா விரதக் கவுமாரர்
குறிப்பி லவிரும் கோமானே!
சித்தி யொடுமுத் தியுமளிப்பாய்!
சிறியேம் சிற்றிற் சிதையேலே
திருவா ழ்மாதைப் பதிக்கினிய
தேவா! சிற்றிற் சிதையேலே.

வி-ம். முருகப்பெருமான். தண்டபாணி சுவாமிகள் விரும்பிய படி திருவருட் சித்தி வழங்கும்போது, மரங்கொத்தியென்ற பறவை கொடியாயிருக்குமென்றனராம். இக்கருத்தை. முருகதாசரநுபூதியில் '' மத்திப்பெருவாழ்விலமைத்து மரங்கொத்திப் பறவைக்கொடியுந் தருகோன் '' என்றருளியுள்ளனர். அது சேவல்போற் சிவந்த கொண்டையும், வீரஒலியும் உடையதாகும். 2

## என்ன தவறு செய்தோமென்றிரங்கல்

பொங்கா ளைத்தால் உன் திருத்தாள்
போற்றும் நெறியிற் பிறழ்ந்தேமா!
புதிய தமிழ்ப்பா மாலைமிகப்
புனைந்து சூட்டல் மறந்தேமா?
வெங்கா னகத்து(டு) இரலையென
மேவு மூன்றும் ஆசையிடை
வெதும்பி னுலும் உனைப்பணிதல்
விடுத்தேம் கொல்லோ? வெறுப்பதென்னே?
கொங்கார் இராமா னந்தர்முதற்
குறைதீர் தவத்தோர் முடிக்கணியாக்
கொள்ளுந் திருத்தாட் டுணை,புழுதி
கூடப் புரிதல் கொடிதாமால்
தெங்கார் சோலைத் திருமாதைச்
செல்வா! சிற்றிற் சிதையேலே
தெய்வத் திருவா யிரர்பகர்ந்தாய்!
சிற்றிற் சிதையேல் சிதையேலே.

வி-ம். இரலை-மான், இது கானலை நீரோடையென்றெண்ணி ஓடியோடி இளைக்கும். அதுபோல, மண் பெண் பொன் என்ற மூன்றாசையால் இன்பமுண்டென்று அலைவது மனம் என்பதாம். இராமானந்தர்-சிரவை மடாலயத்துமுதல்வர், இவர் சீடர் தெங்கு-தென்னை

மரச்சோலை - "தெய்வத் திருவாயிரம்" பொதுக் கடவுளைக்குறித்துப் பாடிய நூல். ஆயிரம் பாடலைக்கொண்டது. 3

## சிற்றிலிற் செய்த சிறப்பு

கொழிக்கு மணலாற் சோறுமுதற்
குயிற்றும் அட்டிற் சாலை,தவம்
கூடிப் பூசை செய்யுமிடம்,
குளிர்சாத் திரபா டஞ்சொல்மனை,
தெழிக்கும் அடியார்க் கமுதளிக்கத்
திகழும் சாலை, முதலாகத்
திருத்தி யமைத்த வருத்தமதைத்
தெரியாய் கொல்லோ? சேரும்இரு
விழிக்குத் துணையாம் உன்திருத்தாள்
வெய்ய வினைசெய் திடல்முறையோ!
விளைத்த தவத்தன் பாளர்மன
விளக்கா விளங்கல் அவையன்றோ?
செழிக்கும் பம்பைத் திருமாதைத்
செல்வா! சிற்றிற் சிதையேலே
தில்லைத் திருவா யிரம்பகர்ந்த
தேவா! சிற்றிற் சிதையேலே.

வி-ம். கொழிக்கும் மணல் - மிகச்சிறிய மணல் குயிற்றல்-செய்தல், அட்டிற்சாலை-சமையலிடம். தெழிக்கும் - செழிக்கும் என்பது மிகுதியைக் குறிக்கும். வெய்யவினை-வீட்டினை அழித்தல், தில்லைத் திருவாயிரம். சிதம்பரத்தினைக்குறித்த ஆயிரம் பாட்டுடைய நூல். 4

## திருவடிச் சிறப்பு

பழிக்கும் மாயா சம்பந்தப்
பட்ட வினைக ளாம் இரண்டு
பார மலையைத் தூளாக்கும்,
பத்தி மலிமெய் யன்பர்செலும்
வழிக்குத் துணையா வரும்,துதிப்பா
வழுத்து மவர்க்கு வழிகாட்டும்,
மாறு நாட்டம் பதியுமன்பர்
மனத்துட் குடியா வயங்கிநிற்கும்,

கையால எழுதும் விதித்தை
அழிக்கும் இருதாட் குருபரனே,
அடியேம் சிற்றில் அழியேலே
ஆமா தையில்வாழ் கோமானே!
அடியேம் சிற்றில் அழியேலே. 5

வேறு வடி

சென்னமர ணப்புணரி சூழ்குநர்த மைக்கரை
செறிக்கும்நற் புணைய தாகித்,
தீயமிடி யாங்கொடிய வெப்பிற் றிளைத்தவர்
தியக்ககற் றுங்தே னுவாய்க்,
கனஆசை யாம்சுழற் காற்றாட லைந்துளோர்
கைப்பற்று கொழுகொம் பதாய்க்,
கழறும்அஞ் ஞானக் களிம்பைக் கெடுத்திடக்
கவின்ஞான வேதி யாகித்,
தினமாத வம்புரியும் அன்பரறி விற்பெருகு
தேனுற தாகி, ஓரெண்
சித்தியொடு முத்தியும் சேரக் கொடுத்திடத்
திகழ்தருவும் நிதியு மாகித்,
தினகரனை னக்கிரணம் வீசுபதம் நோவளம்
சிற்றிற் சிதைத்திடேலே
தெளிதண்ட கூபநீர் பொலிசந்த மாதையாய்!
சிற்றிற் சிதைத்திடேலே.

வி ம் புணரி-கடல், புணை-தெப்பம், தேனு-காமதேனு. வேதி-தாம்பிரத்தைத் தங்கமாகச் செய்வது. தரு-கற்பகம், நிதி-சங்கநிதி, பதுமநிதி. தண்ட கூபம்-திருவாமாத்தூர்க் கோயிலின், மடைப்பள்ளியில் உள்ள கிணறு. மதங்கமுனிவரால் உண்டாக்கிய தீர்த்தச் சிறப்பினது. கூபம்-கிணறு, தினகரன்-சூரியன். 6

பொற்றுண்டு மேருவினி டம்பெயர்த் துத்தரப்
புகர்முகத்(து) ஐங்க ரன்பாற்
போற்றுய் உன் றன்மைஉன திதயத்தின் மிகு
பொலிவினைக் காட்டும், அதனைச் [தயைப்

தாரணியில் உளமனிதர் அதுபெறுந் தவம்இலாத்
தன்மைகாட் டியதென் னலாம்!
சிற்றுண்டி வேண்டன்பன் இச்சித்த படிகுறிஞ்
சிப்பாடி முனிக ளிக்கச்
சிற்றம் பலத்தரன்வ ழங்கிடக் கொண்டுதவு
சீருளாய்! மனமாலறச்
செற்றுன் பதத்தன்ப ரொடுகூட்டி டாமல்எம்
சிற்றிற் சிதைத் திடேலே
திருமாதை நகர்மேவு குருநாத! சிறியஎம்
சிற்றிற் சிதைத் திடேலே.

வி-ம். தண்டபாணி சுவாமிகள், கணபதிப்பெருமானிடம், பொன் மயமான மேரு மலையின் ஆயிரம் சிகரத்தொன்றைப் பெயர்த்துத் தரும்படி வேண்டினர். அவர் தரவில்லை காரணம், உலகமக்கட்கு அதனைப் பெறும் தவமில்லை ஆனால் சுவாமிகள் காக்கூடியவனிடம் தாராளமாகக் கேட்டனர். அது பொன்னுசையன்று. தன்னைச் சார்ந்த பலருக்கும் உதவவேண்டியேயாம். இது அவரது உபகாரசிந்தனையின் தன்மையை விளக்கியது முந்தியே எய்தினும் பலருக்கும் உதவிப் பின் தான்பெற விரும்புவர். திருஞானசம்பந்தரைப்போல.

சிதம்பரம் தெரிசனத்துக்குப்போனசமயம், சுவாமிகளது தொண்டன் ஒருவன், இவ்வாலயத்தில் தேன்குழல் (முறுக்கு) பெரிதாயிருக்குமென்று கூறினன். அதுசமயம் குறிஞ்சிப்பாடி அம்பலவாண சுவாமிகள், அடிகளிடம் உங்கள் அப்பனை முருகனையே பாடுகின்றீர்கள், எங்கள் அப்பனை நடராசப்பெருமானைப் பாடவில்லையே என்றனர். உடனே சுவாமிகள் இவன் கேட்டதைத் தரும்படி செய்யுங்கள் என்றார் இவ்விபரம் ஏதுமறியாத அருச்சகர், சுவாமிகளை அழைத்து வழிபாடு முடிந்தபின், அவ்வித முறுக்கு, சுகியன் ஆதியவற்றை வலிந்து உதவினர். சுவாமிகள் அவரைக் கூப்பிட்டு உங்களப்பன் விரும்பியபடி செய்தானென்றனர். எல்லார் அவன் செயல் என்று ஆர்வமுற்றனர் என்க. எதுவேண்டினும் தெய்வ முன்னிலையாக வேண்டுவர். அது உபாசகர்கட்கு வழிகாட்டியாகும்.

ஏதேனும் ஒன்றை யிறையவன்பாற் கேட்கில்
மாதேனும் ஞானியென் றுத்தீபற. என்பதாலறியலாம். 7

## வேறு சந்தம்

**தனதன தானன - தனதன தானன - தத்தத் தனதானா**

கனமுகில் மேவச னியின்ஒலி நேர்கவி
கட்சொற் றிடும்வாயாய்!
கவின்உரு மாமலை வதிமுரு கோனருள்
கைப்பற் றிடும்நேயா!
சனகிம ணாளனில் உலகர்நல் வாழ்வுத
ழைக்கக் கருதார்வா!
தமிழினில் ஆரியம் உயர்வெனும் வாதுத
விர்த்துச் செயம் ஆர்வாய்!
மனமுதல் மூவகை கொடுவழி பாடுவ
கித்துத் திகழ்வோர்பால்
மறலிவ ராவிதம் அருள்செய்த யாபர
வத்துப்பொரு ளாவாய்
சினமரு வாதருள் புரியும்நன் மாதவ!
சிற்றிற் சிதையேலே
திருவளர் மாதையில் வருகுரு வேளமொர்
சிற்றிற் சிதையேலே.

வி-ம். அசனி-இடி, சனகிமணாளன்-ராமபிரான், மறலி-எமன், இடிபோன்ற கவி என்றது வண்ணக்கவிகளை, வாது - வேலூரில் நடந்த மொழிவாதம். இதில் தமிழே உயர்ச்சியென்ற தீர்ப்புகண்டது செயம், பரவத்து-பரம்பொருள். 8

**தத்ததன தானதன-தத்ததன தானா.**

மெய்ச்சண்முக மாமுனிவி-ருப்பொடும ணோர்நாள்
விட்புலம்உ ளார்களும்வி-யக்கும்அமு தாயே
இச்சகம்உ ளார்விழியெ னக்கொள்குறள் போலே
-எய்ப்பகலும் நால்பகர்எ-னச்சொல்மொழி யாலே
மெச்சருமை நோய்மருநெ-றிப்பெயர்கொள் ஓர்நூல்
வித்தகரெ லாருநர்விழை-யப்பகரு மேலோய்
செச்சைபுரை தான்கொடெமொர் சிற்றிலழி யேலே
சித்தர்பணி மாதைமுனி-சிற்றிலழி யேலே.

வி-ம். சண்முக முனிவர் - வளவனூரையடுத்த குமாரபுரியில் மடமமைத்தவர். செச்சை - வெட்சிப்பூ, இது செந்நிறமுடையது திருவடிகளுக்கு உவமை. 9

தனதன தானத் - தனதன தான - தத்தந் தனதான

தினம்அடி யார்தே றிடநுவல் போதா-சிற்றிற் சிதையேலே
திருமலை மீதே றிமுன் உருள் நீதா-சிற்றிற்சிதையேலே
தினகர னூடே கருதுநர் நாதா-சிற்றிற் சிதையேலே
திருவருள் மீதே செயுமுயர் வாதா-சிற்றிற் சிதையேலே
சினகரம் ஆர்தே வரைநுவல் கீதா-சிற்றிற் சிதையேலே
திகழடி யார்பா டலைவிழை காதா-சிற்றிற் சிதையேலே
செனனவி டாய்தீர் தரஅருள் பாதா-சிற்றிற் சிதையேலே
திருமலி கோமா துருபுர நாதா-சிற்றிற் சிதையேலே.

வி-ம் போதம்-ஞான உபதேசமொழி, தினகரன் - சூரியன், இதனடுவிற் றியானிப்பது உபாசகர் முறை. சினகரம் - கோபுரம் உடைய தேவாலயங்களில் உள்ள கடவுளர் பலரையும் துதித்த பாடல். கீதம் - இசைப்பாடல். செனனவிடாய் - பிறந்து இறந்து வரும் சோர்வு. கோமாதுருபுரம் - திருவாமாத்தூரின் வடமொழிப் பெயர். 10

எட்டாவது சிற்றிற்பருவம் முற்றிற்று

ஆகப் பருவம் 8-க்கு, கவி 80

---

## 9-வது, சிறுபறைப்பருவம்.

சிறுபறை-சிறிய அளவிலுள்ள ஒலிக்கருவி. இதனால் மக்கட்குச் செய்தியறிவிப்பது. அறவுரைகளைப் பகர்ந்து பறையை முழக்கு எனக் கூறுவதென்பதாம்.

### பொது அறம்

கொல்லாமை, ஊன் உணவு கொள்ளாமை, இஞ்சைகள்
ஆயிற்றுமை தருமமென்றும்,
கோதையர், பொன், மண், என்னும் ஏடணையில் மூழ்கி
கொள்கைஉயர் ஞானமென்றும் [டாக்
கல்லாமை ணத்தகும்வன் நெஞ்சர்முன் இரந்திடல்
கடும்பாவம் ஆகுமென்றும்,
கையில்மலர் கொண்டருச் சித்(து) உருவம் நாடும்நிலை
கவுமார நெறியதென்றும்,

வல்லாண்மை யுறுசூர் உரம்பிளந் திட்டவேல்
வைத்தவன் முகங்கள் ஆறே
மறைசெப்பும் மூவாறு சமையவகை யாமென்றும்,
மாநில முதற்பல் உலகும்
செல்லார் இடித்தொனியில் உன்னிரு திருக்கைகொடு
சிறுபறை முழக்கி யருளே
தேவர்பணி மாதையிடை அவல்கொடு வாழ்குரவ!
சிறுபறை முழக்கி யருளே

வி-ம் "அறத்தில் அறம் கொல்லாமை" என்பது மநுநெறித் திருநூல். "உண்மை வேண்டும் புலால்-பிறிதொன்றின் - புண்ணென்றுணரப்படின்" திருக்குறள். இம்சை-" காதறுத்தல், பீசம் நைத்தல், காயிரும்பினூற்சுடுதல்-பாதகமேயென்னப்படும்" என்ற இவர் பாடலாலறியலாம். ஏடணை-மூன்றாசை, மூழ்குதல்-அவற்றில் மிக மயங்கி உழலல். இரத்தல் பாவம் இரத்தலும் ஈதலேபோலும், கரத்தல்-கனவினும் தோன்றுதார் மாட்டு" என்பதால், லோபிகள், பாபிகள் இவர்களிடம் யாசித்தல் மிகப்பாவம். கௌமார நெறி- உருவ வழிபாட்டை மேற்கொள்ளல். ஆறு சமய மூர்த்திகள் முருகன் ஆறு திருமுகமென்றறிவது. முதிர்ந்த உபாசனையிலமையுமுண்மை. செல் ஆர்-மேகத்தில் உண்டாகின்ற இடி. செல்-மேகம் ஆர்-பொருந்திய, இடிபோல முழக்கிக் கூறுக. என்பதாம். 1

## நால்வகை நிலை கூறல்

ஆலயத் திருவலகு, திருமாலை, தீபமுக
லனபுரிதல் சரியை யென்றும்,
அன்புடன் கந்தமலர் புனலாதி கொடுபூசை
ஆற்றுவது கிரியை யென்றும்,
ஞாலமொடு தேகநினை வறமனம் நிலைத்தருளில்
நண்ணும்நிலை யோக மென்றும்,
கற்பரத் திடைஒன்றி ரண்டறப் பதியும்நிலை
நவையறுமெய் ஞான மென்றும்,
பாலனென மற்றோர்தாய்ப் பால்உணல் இலாது(உ)
பரத்திலுறல் முத்தி யென்றும். [டல்
பகரும்இவை யாவமெய்க் குருவருளி னல்நன்கு
புரிதாரர் என்றும், உன்றன்
சீலமலி சங்காழி வரைகொள்கர மலர்களாற்
சிறுபறை முழக்கி யருளே
சீதைகண வன்பரவு மாதையவிர் சிம்புள்முனி
சிறுபறை முழக்கி யருளே.

வி-ம். கந்தமலர் - மணமிக்க மலர்கை, ஆற்றுதல் - செய்தல், ஒன்று இரண்டு அற்ற நிலை - இது நிட்டையின் அநுபவம், தலைவனுடன் தான் ஒன்றுபட்டும் வேறாயும் உள்ள நிலை. "நீயும்நானுமாய் ஏகபோகமாய்" என்றும், நீ வேறெனாதிருக்க - நான் வேறெனாதிருக்க" என்பர் திருப்புகழில் அருணகிரிநாதர். உயிரும் இறைவனும் வேறாயிருப்பின் இன்பமில்லை. ஒன்றாகிவிட்டால் அறியும் அறிவில்லை. மேலும தெளிவாகச் சொன்னால், கற்கண்டினை வாயிலிட்டுச் சுவைக்கும்போது, கற்கண்டும் சுவைக்கும் நாமும் ஒன்றா வேறா? வேறாக கையிலிருந்தால் சுவையில்லை கற்கண்டாகவே நாமாகினால் சுவைப்பனை நாமில்லை இரண்டும். உயிரும் இறையவனும் இணையும்போதே பேரின்பநிலைப்பு ஏற்படுமென்க—மேலும் விரிக்கிற் பெருகும். அநுபவ நிலை இது.

தலைவனை இறையருளும் தலைவியான உயிரும் ஒன்றுபட்ட பேரின்பநிலை சொல்லமுடியாத. "அவ்வாறறிவார் அறிகின்றதலால்-எவ்வாறொருவர்க்கிசைவிப்பதுவே" என்பது அநுபூதி. இதனைத் திருமூலர் உலகியலோடு இணைத்துத் தெளிவாய்க் கூறினர். "மகட்குத் தாய் தன் மணாளனோடாடிய-சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமாறு எங்ஙனே" என்பதுபோலாம். யோகம் என்றால், ஒன்றுபடுதல். சீவான்மாவும் பரமான்மாவும் ஒன்றுபடுதல், தியானமும் ஆம். முத்தியில் உயிர் இறைவனுடன் ஒன்றிவிடும். இரண்டென்பது இல்லை.

ஒன்று என்றும் இரண்டொன்றும், இரண்டற்ற ஒன்று, என்றும் அத்துவிதமென்ற சொற்குப் பொருள் காண்பர் ஆன்றோர்.

சங்கு-ஆழிவரைகொள் கரம், தண்டபாணி சுவாமிகள் கைகளில் உள்ள ரேகை (வரைகள்) வலக்கையில் சங்கு ரேகை, இடக்கையிற் சக்கரரேகை உண்டு. இதுமாற்றம், வலக்கையிற் சக்கரமும் இடக்கையிற் சங்கமுமாக அமைந்திருப்பின் பேரரச வாழ்வில் இருப்பார்கள். திருமாலம்சமாகவே வாழ்வார்கள் சீதை கணவன்-இராமர் இவர் வழிபட்ட தலம் திருவாமாத்தூர். 2

## அருளால் நிகழவேண்டியவை

கரும்பாறையிற்றொடு கிணற்றிடைநன் நீர்வருதல்
கண்டடியர் இன்ப முறவும்,
கடல்நீரில் வாவியில், தீயினில்விடுத்தநின்
கவியாவும் மீண்டு வரவும்,
பெரும்பாதகக்கொலையுடன் புலையும் விழையுமவர்
பிழைகொள்நெஞ் சேக்க முறவும்,
பேசுநின் பாடல்போற் றேசுலாம் வடலூர்ப்
பெருந்தவன் எழுந்து வரவும்,

சுரும்பார்க ருங்குழற் கலைமினும் புகழும்நின்
தூயகவி நேய முடனே
சொல்லுமவர் எல்லைதவிர் நல்லசுக முழுவதும்
தாய்த்தருட் சித்தி பெற்றுத்
திரும்பாத வீடுவரை பெற்றுவகை கொளவும்,நின்
சிறுபறைமு ழக்கியருளே
செல்வமலி மாதைநகர் வைகிமிளர் தேவனே!
சிறுபறை முழக்கியருளே.

வி-ம். 1. அடிகள் திருநெல்வேலியில் சொந்த நிலத்தில் நந்த வனத்துக்கென்று கிணறெடுத்தனர் முதலிலிருந்தே வெடிவைத்து உடைக்கும்படி பாறையாயிற்று. நீர் ஊற்றுவருமென்ற உத்தரவு காரணமாகப் பெரும் பொருட்செலவும், பிரயாசையுமாய்விட்டது. அருளால் வருமென்றறிந்து தவமியற்றிவர்.

2. தான் பாடிய பாடல் எழுதிய பனையோலை ஏடுகள் பல. மற்றை ஊடல்பற்றிக் கடல், ஆறு, தீயில்இட்டழித்தனர். அவை மீண்டும் வரவேண்டுமென்பது கருத்து. உருவழிந்துபோனவை வருமா? என்பதற்கு அவிநாசிக்குளத்தில் முதலையால் உண்ணப் பட்டுச் சீரணித்துப்போன மகவு, வறண்ட குளத்தில் நீரும் முதலை யும், வளர்ச்சியுடன் மகவும் வந்ததாயின் இதுவும் வருமென்ப துண்மை. அருளின் செயலுக்கு இது பெரிதல்ல.

3. வடலூரார், திரும்பவும் வரும்படி சுவாமிகள் சிவஞானப்படி பாடினர் பதிகம் அவர் வரவேணுமென்பது தம் கருத்து. இதுவும் அருளின்பாற்பட்டது திருமயிலையில் பூம்பாவை வந்ததுபோல, திருவருள் பெற்றவர் உலக நன்மைக்காக இதுபோன்ற ஆடலியற் றிக் கடவுட்பற்றினை வளர்க்கவேண்டிச் செய்பவையாம். செய்யமுடி யாதவற்றுள் இவை அருளால் வரவேண்டியவை என்பதாம். 3

## சிறுபறையின் ஒலிக்குச் சில சான்றுகள்

பூரணகலாமதிகு லாவுநாள் வார்கடல்
பொருந்திடு முழக்க மென்னப்,
புணரிநீ ருண்டமுகில் இடிசெயு முழக்கெனப்,
பொன்னகர்க் களிறு பிளிறும்
சீரவிர்மு ழக்கெனப், போர்வேல்கொள் வீரர்கள்
செயும்சமர் முழக்க மென்னத்,
திகரியரி முழக்கென்ன, வாயுவே கத்திற்
செலுந்தேர் முழக்க மென்னக்,

கூரவிர்ப தாயுதம், செச்சை, சிகி, கூவலிற்
கொள்பெரு முழக்க மென்னக்
குன்றில்விழு பேரரவி கொண்டிடு முழக்கெனக்,
கொஞ்சுர் அஞ் சுகவ டிவுறும்
தீரனுவல் செஞ்சொற் றிருப்புகழ் முழக்கெனச்
சிறுபறை முழக்கி யருளே
திருமாது கலைமாது பணிமாதை நகர்நாத!
சிறுபறை முழக்கியருளே

வி-ம். பொன்நகர்க்களிறு-ஐராவதம் பதாயுதம்-சேவல், பதம்-காலிலுள்ள நகத்தால் போர் செய்வது, காலாயுதம், நகாயுதம் என்பதும் சேவலின் பெயர்கள் செச்சை - அட்டுக்கடா, சிகி - மயில், தலையில் சிகையுள்ளதென்பதாம். அஞ்சுக வடிவு - கிளி வடிவம் உள்ள அருணகிரிநாதர். திருப்புகழ் படித்தலின் ஓசை இடிபோலிருக்கவேண்டும். திருமாது - இலக்குமி. கலைமாது - சரசுவதி, இவ்விருவரும் வழிபட்ட தலம் திரு ஆமாத்தூரென்பதாம் 4

வேறு

பாவாணர் பரவுசங் கரன்ஆடு ததிநந்தி
பண்ணுதண் ணுமைமு ழக்கும்,
பற்றும்அவன் ஓர்கையின் உடுக்கைகொள் முழக்
பாஞ்சசன் னியமு ழக்கும், [கும், மால்
காவாணர் செய்தேவ துந்துபிமு ழக்கும், உயர்
கானநா ரதர், தும் புரு
கைக்கொள்யாழ் இசைமுழக் கும், சிலைஇவர்ந்த
கர்ச்சனைமு ழக்கும், மறையோர் [அரி
நாவாலு ரைத்தசுரு தியின்முழக் கும், பால்
நயந்துகா னேசொ ரிந்து
நண்ணழக னுக்காட்டும் ஆவினமு ழக்கும், விடை
ஞாட்பின்மாக் கொலிமு ழக்கும்
தேவால யங்கொள்மர சொலிமுழக் கும்எனச்
சிறுபறை முழக்கியருளே
திகழ்நாத மானமறை ஒலியாள! மாதையிடை
சிறுபறை முழக்கியருளே.

வி-ம். தண்ணுமை - மத்தளம். பாஞ்சசன்னியம் - திருமால் கையில் உள்ள சங்கு, துந்துபி-தேவ வாத்தியம். அரி-சிங்கம், மாக்கொலி-போர்க்கேகும் இடபத்தின் கத்தல், நாதப்பறை-யோகிகள் காதில் ஒலிப்பது. அதையுடையவர் அடிகளென்பதாம். 5

## வேறு ஷை

கதிர்வீ சிடும்நெற் பயிர்விளைக்கும்
காரேர் உழவர் வாய்த்தொனி,வண்
காவார் பூவார் வண்டுமது
களித்துண் டியற்றுந் தொனி,பம்பை
நதிநீர் வெள்ளம் பெருகுதொனி,
நற்பா வலர்க்கு வேண்டுவன
நல்கும் தனிகர் மனைதோறும்
நாட்டு கண்டா மணித்தொனி,இன்
துதியோ தன்பர் அரநாமத்
தொனி,நா கணைவாய் அஞ்சுகங்கள்
தொடுக்குந் தொனி,வீட் டினிற்சிறுவர்
சொல்லு மழலைத் தொனி,நாளும்
முதிர்சீர் ஆமா தைப்பதியாய்!
முழக்கி யருளாய் சிறுபறையே
முழக்கும் வண்ணக் கவிச்சரபா
முழக்கி யருளாய் சிறுபறையே.

வயங்கும் குமுத வதித்தடத்தில்
வதிவெண் ணிறச்செந் நிறஆம்பல்
மலரும், இருகோ கனப்பொலிவும்,
வளர்செங் கழுநீர், உற்பலமாம்
நயங்குன் றலில்பூ வாற்காவார்
நாட்டுச் சுரரும் நாட்டமுற
நண்ணும் வியனும், தெங்குபலா
நற்சக் காரம் கதலிமுதல்
தயங்குந் தருஊர் நடுப்பழுத்த
தன்மை போலத், தனைச்சார்ந்தோர்
தாம்கொள் குறைமுற் றகற்றுகொடைத்
தகைதோய் செல்வர் களிப்புமிக
முயங்குந் திருமா தைப்பதியாய்!
முழக்கி யருளாய் சிறுபறையே
முத்தமி ழப்பா டிடுபுலவா
முழக்கி யருளாய் சிறுபறையே.

வி-ம். குமுதவதி-ஆம்பலம்பூம்பொய்கை என்று திருஞானசம்பந்தர் திருவாமாத்தூரில் உள்ள குளத்தைப் பாடியுள்ளார். குமுத

வதி-செவ்வாம்பல் (செவ்வல்லி) கோகனம்-தாமரை, இருவகை யென்றது வெண்டாமரை-செந்தாமரை மலர்கள், செங்கழுநீர்-இது ஒரு நீர்ப்பூ, உற்பலம்-நீலோற்பலம், சக்காரம்-மாம்பழம், கதலி-வாழை, இவை போல்வன நல்லூருள் பழுத்துப் பலருக்கும் பயன் பெறும்படி உள்ளன. "பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால்-செல்வம் நயனுடையான்கட்படின்" என்பதுபோல ஆமாத்தூரில் உள்ளன என்பதாம்.

முத்தமிழ்-இயல், இசை, நாடகம் என்பன. 6

## வேறு சந்தம்-பொதியையிற்கண்ட அநுபவம்

தனதனன தத்ததன—தனதனன தத்ததன
தனதனன தத்த தனனா

1. அளிநறைகு டிக்குமண மலரினமி குத்ததரு
அவிர்மலய வெற்பின் இடையே
அணுகிமுனம் நற்றவசு புரிதந்தியி னிற்றுணைவர்
அரிபதர்வ ழூக்து மறையோர்
அளிமிகும னத்தொடறை அநுபவம தித்(து)அவர்கள்
அகலிழைவ ளித்த தயையாய்
2. அவண்ஒருதி னத்தில்மரு வியதெரிச னப்பெருமை
அறிபவர்உ யர்ச்சி சிறிதோ?
மிளிர்கடிதம் ஒற்றன்உத விடுதலின் அருட்கொ(டு)
வியன்மலி கிணற்றில் வரும்ஓர் [அறல்
விதர்உயரும் நிட்டையிடை தெரிமுதல்வ! சட்
விரதியரும் நத்து குரவா! [சமய
தெளிதமிழ்பொ றிக்கும்இரு கரமிசைகு ணிற்கொடுயர்
சிறுபறைமு ழக்கியருளே
திருவளர்ப சுக்கலர்மன் உயர்நகரி னிற்பெரிது
சிறுபறை முழக்கியருளே.

வி-ம். அளி-வண்டு மலயவெற்பு-பொதியைமலை அளி-அன்பு, அறல்-நீர் சட்சமயம்-ஆறுசமயம். விரதியர்-அதிற் கட்டுப்பட்ட உபாசகர் பொறிக்கும்-ஏட்டில் எழுத்தாணியால் எழுதும் தரமுள்ள கைகள், குணில்-சிறு தடி.

1. அடிகள் பொதியையில் தங்கிக் கிணற்றில் நீர் வர விரும்பித் தவமியற்றிய சமயம், தமையன் தம்பியென்பார் திருமாலை வேண்டித் தவமியற்றியிருந்தனர் அக்கால் தம்பியின் மனவெளியிற் கண்ணன்

தோன்றிச் சில கூறினர். ஆனால் அதன் தெளிவான முடிவைக் கூற வில்லை. அதனால் மனமுடைந்து. அங்கே அகத்தியர் கோவிலிற் பூசிக்கும் அந்தணரிடம் எங்கள் முடிவு இது என்றனர். அது சமயம் நம் அடிகள் என்ன முடிவு என்றனர், தம்பி ஏதாயிருப்பின் உமக் கென்ன என்று கூறினர். அண்ணன் தம்பியை நோக்கி ஏன் இப்படி ஓதினை, இவர் பெரிய தவசி, அகத்தியர் வந்தாலும் இப்பத்தான் பேசுவாயோ நமக்கு இது தரமல்லவே என்று சொல்லி அடக்கினர். பின் சுவாமிகளைக் கண்டு தமையன் கூறுவதானார்.

சுவாமி இவன் என் தம்பி இருவரும் வறுமை காரணமாகத் தொல்லைப்பட்டோம். இவன் மனவெளியிற் கண்ணன் தோன்றி அருளுரை கூறினன். ஆனால் புதையல் கிடைத்தும் எடுக்க வகையறி யார்போல் உள்ளோம் என்று கூறி, தம்பீ நீ கண்ட அநுபவத்தை அடிகள்பால் சொல். நமக்கும் அவனருள் கூடுமென்றனர், தம்பி கூறலானார்.

நான் மனவேதனையாற் சொன்னதை மனம்கொள்ளவேண்டாம். நாங்களிருப்பது வாகைக்குளம். நாங்களிருவரும் இங்கே உணவின் றித் தவமியற்றினோம் அக்கால், கண்ணன் என்முன் தோன்றினன். முருகனன்பன் ஒருவன் உள்ளானும். அவர் கிணறோ குளமோ எடுத்தானும். நீர் வருவது கருதித் தவஞ்செய்கின்றவனும். அவ னால் எமது குறை தவிருமாம். அவ்விடத்தில் பேருற்று வருமாம் ஆனால் அவர் இருக்குமிடம் கூறவில்லை. எனவே வாணதீர்த்தம் போய்த் தவமிருக்க எண்ணியுள்ளோம். அங்கும் விவரம் தெரியா விடின், அங்கேயே உயிர்விடக் கருதியுள்ளோம். இதுவே எங்கள் முடிவு என்றனர். கேட்டதும் அடிகள், வியப்பு ஒருபால், விசன மொருபால் எய்தினர்.

தவமிருந்து காட்சி கண்டு அருள் உரைபெறுமளவுசெய்த தவம் பற்றியும், தனக்கு நீர் வருவதற்கானஅநுகூலமான வுரை பெற்றது பற்றியும் வியப்புதவிற்று. இவர்கட்கு வேண்டுமளவு பொருளுதவக் கூடிய நிலையில் இல்லையே என்ற விசனம் எய்தியது. இருப்பினும், உடனே அடிவாரத்தன்பருக்குச் சீட்டனுப்பி உணவுக்குவழி முதலில் செய்து, பொருளுதவியும் செய்தனுப்பினர். கிணற்றினால் பெரு மளவு கடனிருப்பினும், "சந்தனக்கட்டை தேய்ந்தாலும் மணம் குறையாதென்றபடி செய்தனுப்பினர் என்பதொன்று.

2 மற்றும், அங்குத் தவம்செய்த மற்றொருநாள் நிட்டையில் ஒரு கடிதம் தூதன் ஒருவன் தந்தான். அது தமிழல்லாத ஆங்கி லத்திலெழுதப்பட்டிருந்தது. இது அறிந்தவரில்லையே என எண் ணுங்கால், ஒருவர் வந்து படித்துச் செய்தி கூறினர். அதாவது நீங் கள் வெட்டிய கிணற்றில் நீர் வரக்காண்பதையறியவே நான் இவண உள்ளேன். வந்ததைக்கண்டுபின் என் நாடு செல்வேன் என்பதைப் படித்தோதினர். அடிகள் இவ்வாறு நம்மீது கருதும பகைவர்

யாரெனக் கருதி அடியிற் கையொப்பமிட்டது யார் என வினவினர். சயில்ட் என்றனர். அதாவது குழந்தை என்பது பொருளென்றனர் வந்தவர்.

அடிகள் மனம் தெளிந்தனர். கடவுளின் குழந்தை யென்பவர் ஏசுகிருத்து. நமது பகைவன், உயிர்க்கொலையினும் கொடிய பசுக் கொலை புரிபவர் அவ்வினத்தார். இனித் திருவருளால் நடைபெற வேண்டுமென்றறிந்து அமைதியுற்றனர் என்பது 2 அடிகளிற்கண்ட அநுபவம் வரலாற்றால் அறியலாம். 8

தத்ததன தானதன—தத்ததன தானதன
தத்த தன தனனு

கொத்துறுபல் பூவைகைகள்—கொட்டுவழி பாடதுகு
யிற்றும் அடியவரே
கொப்பமுறும் யானைநிகர்—கட்டமகல் வாழ்விடைகு
ளித்து மகிழ்வுறுவார்.
நத்தொர்பொரு ளேநினைப—வர்க்(கு)அவித மாயருள்ந
லத்தை யுதவும், விண்வாழ்
நற்புலவர் கோன், அயன்அ—ரிப்பதமும் மாதவர்ந
யக்கில், உறல்எளிதே
சத்துமுதல் மூவிதர்ஒ—ருப்படுசு வாநுபவ
சற்புருடர் இனமே
தற்பரமதோடுவிர—வத்ததுமெய் வீடடைதல்
சத்தியமதெனவே
முத்துதிரும் வேய்வனமு—ளைத்தமுதல் வா!நனிமு
ழக்கு சிறுபறையே
முத்தர்பணி மாதையில்வ—சிக்கும்இறை வாமிகமு
ழக்கு சிறுபறையே.

வி—ம். கொப்பம்-யானைபிடிக்கும் குழி. புலவர்கோன்-தேவேந்திரன், அரிப்பதம்-விட்டுணுபதவி. மூவிதம் சத்து சித்து, ஆனந்தமென்பன. ஒருப்படுதல்-இவை ஒன்றுசேர்ந்த நிலை அநுபவம்-சுவாநுபவமாகும். தற்பரம்-பரம்பொருள், வேய்வனம் மூங்கிற்காடான திருநெல்வேலி. 9

தனத்த தனதன-தனத்த தனதன-தனத்த தனதனு.

முகிழ்த்த மனதினர் கருத்தில் வதிபவ!
முழக்கு சிறுபறையே
முடித்த தவமுனி வரர்க்கொர் எளியவ!
முழக்கு சிறுபறையே

முகக்கண் அகவிழி யிடத்தில் அவிர்குரு
முழக்கு சிறுபறையே
முசுப்பு ரவனில் அளிக்கும் இறைவர
முழக்கு சிறுபறையே
முகிற்கொள் அசனியின் முழக்க மெனநனி
முழக்கு சிறுபறையே
முயற்சி யுடையவர் உயர்ச்சி யினரென
முழக்கு சிறுபறையே
முகக்கு மலர்நிகர் துணைக்கை கொடுநிதம்
முழக்கு சிறுபறையே
முன்ஒப்பில் முனிவர்கள் உயக்கொள் பதியிறை
முழக்கு சிறுபறையே.

வி-ம். முகிழ்த்த-குவிதலையுடைய, முகக்கண்-தூலக்கண், அகவிழி - மனக்கண், முசுப்புரவலன் - முசுகுந்த அரசன் போல்பவன், தமிழ்நாட்டை ஆளவேண்டுமெனல், முகில்-மேகம், அசனி-பேரிடி. முகக்குமலர்-மணத்தை முகரவுள்ள மலர், முனிவர்-கோபதாபமாதிய வற்றை வெறுத்தவர் என்பது பொருள். 10

சிறுபறைப்பருவ முற்றிற்று
ஆகப்பருவம் 9-க்கு கவி 90

---

## 10-வது, சிறுதேர்ப்பருவம்

*சிறிய அளவிற் றேரமைத்து விளையாடுவதைக் கூறுவது*

தண்டபாணி சுவாமிகள். திருவருட் சித்தியைப்பெற்று, கொலை புலை செய்துண்பதே தொழிலாயுற்றிருந்த, அன்றைய ஆங்கிலப் பேரரசை, முருகன் போலத்தான் தேரேறிச்சென்று, தூதன் மூலம், வீரவாகுதேவர்போல ஏவி, அழித்தலை விரும்பியிருந்தனர். என்ற கருத்தை அடிப்படையாக்கிக்கொண்டு, இக்கவி தேர் ஏறுவதைக் கூறுகிறது

பகைவரை வெல்லத் தேரூர்தல்

கடலினிடை மேவிஉயர் பசுவதைசெய் பாவியர்கள்,
கபடமன தாளர். அவர்வூர்
கதறிடும் படிசேத மாக்கிஅருள் ஆக்கமிகை
காட்டஒரு தூதை யேவி

விடஅரவு போலுமவர் தூதனம ரிற்றண்டு
வேல்வாள்மு தற்படை களால்
வெட்டுண்ட போது,நிணம் மட்டுண்ட தலையுருள,
விட்(டு) இளைஞர் எறிபந்துபோல்
மடமடென ஓடியுரு ளச்,செநீர் நதிபோல
வாரிவரை நீடி உருள,
வன்குமா ரத்தகைத் திருவருளை வேண்டல்போல்
மருவும்நாள் அடிய ருடனே
திடமலிபெ ருந்தேர் இவர்ந்திடுதல் போல,நீ
சிறிதேர் உருட்டி யருளே
திருமாதை வாழருட் குருநாத னே!எழிற்
சிறுதேர் உருட்டி யருளே.

வி-ம். கடல் கடந்து செல்லவுள்ள வெளிநாடு. அரவுபோலும் அவர் சட்டதிட்டங்களால் இன்னல் செய்தவர் நிணம் ஊன், மட்டு-கள், நிணம் அட்டுண்ட என்றும் பொருள் கொள்ளலாம். அட்டு-வேகவைத்துச் சுவையூட்டி உண்டல். செந்நீர்-இரத்தம், குமாரத் தகை-திருவருட்சித்துடையோர். அவ்வாறு தேருர்ந்து செல்வதை விளக்க, இன்று முன்னோடியாகச் சிறுதேர் உருட்டுக எனல். 1

## இதுவும் அக்கருத்தை வலியுறுத்தும்

அல்லமனை விட்டுணுக் கமலயோ கிப்பெயர்கொள்
ஆன்றஅரு ளாளர் போல,
அவிர்சொருப சித்தியாற் பிரணவப் படிவம்
அகிலமிசை அளவில் உயிர்கட் [உற்று
கொல்லல்,இழி ஊனுண்டல், இஞ்சைபுரி தீயரொடு
குலவுசிறு பாலர் தங்கள்
குறித்தோல்கொய் திடுதீங் கியற்றுநர் உயிர்க்
கொளப்ப ரிந்(து)அ தற்பின் [கருணை
நல்லறுவ கைச்சமய பேதமும் வேதத்தில்
நவில்பரத் தின்க ருணையா
நண்ணு மார்க்கங்களென எண்ணிஅவர் அன்பு
நாடுகுரு வாவி ளங்கச் [செய
செல்லஅரு ளால்எய்து தேருரும் முனம்உனது
சிறுதேர் உருட்டி யருளே
திருமாதை வாழருட் குருமாத வா,உனது
சிறுதேர் உருட்டி யருளே

வி-ம். அல்லமப்பிரபு - பிரபுலிங்கலீலையில் வரும் அல்லமர், சொருப சித்தர், சிவனமிசமாக வந்தவர். விட்டுணுகமலயோகி-என்பவரும் அவர் ஒப்பவர் மும்மூர்த்திகளமிசமாக வந்தவரென்பது பெயரிலும் அமைந்துள்ளது. இவர் அருளாடலியற்றி, தீயரை வென்று அருளை நிலைபெறச்செய்தவராவர் மற்றும், சமயம் ஆறும் பரம்பொருள் ஒன்றின் குணவேறுபாடுகள், பொருள் ஒன்றேயென்பது சமரச உண்மை. அவ்வாறு செய்யும் அருளாடல்களைக்கண்ட மக்கள் போற்றும்படியான அருட்சித்தராகி ஆங்காங்கும் செல்லத் தேநர்பவரான அடிகளே சிறுதேர் உருட்டியருள்க என்பதாம்' குறித்தோல்கொய்பவர் இசுலாமியர். 2

அடிகள்முன், திருமலையில் ஏறி உருண்டதை நினைவுபடுத்தி,
அன்பர் புரியும் வழிபாட்டினைக் கூறுவது

*திருமலியும் நின்னருட் படிவமீ தன்பர்தாம்*
*தேன்பால் கருப்பின் இரசம்*
*தெங்கிளங் காய்நீ ருடன்கந்தம் வாசம்*
*செழிப்புறவி ராவு தெண்ணீர்*
*மருமலிப முச்சாற னைத்தும்ஆட் டிடஅதொரு*
*வனத்தியில் ஓடி யுருள*
*மருவுதிரு மலைமீதில் ஏறிச்ச டானனம்*
*வயங்குகும ரேசன் மயில்மேல்*
*வருவதுகு றித்தளியில் அரியகவி சொலிஉடலின்*
*வாஞ்சைவிட்(டு) இப்பு விப்பால்*
*வரஉருள விட்டநின் தளியில்உடல் உருள,வலம்*
*வந்தன்பர் போற்றி செய்யத்*
*தெருள்பொலி குருத்துவப் பெருமைபல காட்டுவாய்*
*சிறுதேர் உருட்டி யருளே*
*திருமாதை வாழருட் குருநாத பொன்மயச்*
*சிறுதேர் உருட்டி யருளே.*

வி-ம். படிவம்-வடிவம் கந்தம் மணமிக்க சந்தனம். சடானனம்-ஆறுமுகா, சட் ஆனனம் வடமொழிச்சந்தி ஷடம் - என்பது சடம் எனத் தமிழில் வந்தது ஆனனம்-முகம் வாஞ்சை-உடலபிமானம், தளி-கோயில், உடல் உருள வலம் வருதல் அங்கப்பிரதட்சணம் என்பர். தெருள்-தெளிவு 3

தேரின் அமைப்புக் கூறல்

*வேதாந்த சித்தாந்தம் என்னும்இரு பகுதிகளும்*
*வியன்மிகும்நல் உருள்க ளாக,*
*மிக்கசம ரசநிச்ச யாநுபூ திக்தெளிவு*
*மேதகைய அச்ச தாகப்*

பேதாங்கம் உற்றபல் புராணசரி தங்கள்மிகு
பெட்புறுகழ் அணிக ளாக,ப்
பெருகொளிப் பரிதிசிவன் உமைமால்க ணேசன்
பேசுர்நெறி ஆறும், அப்பால் [வேள்
வாதாந்த முத்தியருள் அநுபவ அதீதமும்
வாய்ந்தஏழ் தட்ட தாக,
மருவுர்உள் ளன்பெனும் வடம்பூட்டி, இருகரம்
வயங்குறப் பற்றி, வாசச்
சேதாம்பல் வாவியிசை மீதோங்கு மாதையிடை
சிறுதேர் உருட்டி யருளே
திறல்கொள்பதி கச்சதகர் நுவல்சரப சற்குரவ!
சிறுதேர் உருட்டி யருளே.

வி-ம். வேதாந்தம்-வேதமுடிவு. சித்தாந்தம் - முடிந்த முடிவு. வேதாந்தமென்பது. எல்லாம் பரமாகவும், தான் அதாகவும் காணும் அனுபவநிலை தூலமான விவகாரத்தில் அவ்வாறு இல்லை. எனவே அநுபவத்தைப் பேசியமைதல்கூடாது "அவ்வாறறிவோர் அறிகின்றதலால்-எவ்வொருவர்க்கிசைவிப்பதுவே" என்றும் "சும்மா இரு" என்றும் கூறியது அநுபவம். சித்தாந்தமாவது, பதி. பசு. பாசம்- என்ற மூன்றும் முத்தியிலும் உண்டென்பதாம். இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று முரணபட்டது "சமரசமாவது - வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை" என்பர்—தாயுமான அடிகள். இதன் விளக்கமாக தண்டபாணி சுவாமிகள், கௌமார முறையிற் கூறுவதாவது:—

"பந்தத்தும் பொருள் ஒன்றாய் பகர்கின் றோரும்
பரத்தினிலும் மூன்றுபொருள் பகர்கின் றோரும்
அந்தத்தே வருஞ்ஞான மடைந்தோ ரல்ல
அதில்ஒன்றே இதில்மூன்றே அறையவேண்டுமென்பர்".

பந்தம்-உலகியல். இங்கு பதி பசு, பாசம் மூன்று என்றும், பரம்-முத்தியில், இவை ஒன்றான பிரமத்தில் காய்ந்த இரும்பில் பட்ட நீர்போல வேறுபாடற்று உயிர் கரையும் என்றும் கூறினர் விவரம் அந்நூல்களிற் காண்க. 4

இவ்விரண்டும் இரு சக்கரமாயிருப்பதாம். இதன் இணைப்பே சமரசம் என்பது கருத்து. இது இணைக்கும் அச்சாக இருக்க, சமயங்கள் பலவற்றின் வரலாறுகள் தேரின் பல அணிகளாக அமைய சமயம் ஆறும், சமயாதீதம் ஒன்றும் ஆக ஏழும், ஏழு தட்டுகளாக அமைக்கப்பட்ட தேர். அன்பென்ற கயிற்றால் வடத்தையமைத்து. இரு கரங்களாலும் சிறிய தேரினை உருட்டுக என்பதாம். சேதாம்பல்- செவ்வல்லி இது குமுதம் என வழங்குவர். இம்மலர் மிக்க வாவி-குளம் உடையது திருவாமாத்தூராகும்.

பதிகச்சதகம்-பத்துப் பாடலாலான பதிகம் நூறுள்ள சதக நூல். ஆயிரம் பாடல்-இதுபோல, நூறு பாடலாலான சதகம் பத்துக்கூடிய நூல் சதகப்பதிகம். இதுவும் ஆயிரம் பாடல் உடையது. இதனை யியற்றியவர் இவரென்பதாம். 4

தேரினமைப்பு – மற்றொருவகை (சிவன் ஊர்ந்தது)

சந்திரனு டன்பரிதி என்னுர் இரு சுடர்களும்
தகைமிகும்நல் உருள்க ளாக,ச்
சாகரச் சினைஉடைய தாக்கொளும் பார்மினுள்
சார்பெருந் தேர தாக,
வெந்திறற் றசுவர் அனு கரியஒளி மயமான
மேருமலை வில்ல தாக,
வெவ்வரவ நாணியாய், விண்டுவொரு கணையாக
வேதம்நான் கும்ப ரிகளாய்
மந்திரம றைப்பிரமன் விடுபாக னுக்,குடிலை
வன்கசைய தாக, முன்னுள்
மறுவணிகை அரன்முப் புரம்தகித் தாங்(கு)
வலியால மூன்றும் அழியச் [இநாள்
செந்தில்முரு கேசனருள் புந்திகொளு மாதைமுனி!
சிறுதேர் உருட்டி யருளே
தேவால யங்கள்பல மேவார்வம் ஒன்(று)இறைவ!
சிறுதேர் உருட்டி யருளே.

வி-ம். உருள்-சக்கரம். சாகரம்-கடல், இதை உடைபோலச் சூழப்பெற்றிருப்பவள் பூமிதேவி, இது தேராயிருந்தது. மற்றும். மேருமலை வில், ஆதிசேடன் நாண். திருமால் அம்பு. பிரமன் தேர்ப் பாகன். குடிலையென்ற பிரணவம் சாட்டை, வேதம் நான்கும் குதிரை கள். இப்படியமையத் திரிபுரத்தைக் குறுநகையால்முன் சிவன் தேரேறிச்சென்று எரித்தார். திரிபுரம் என்பது ஆணவமாதிய மும் மலம் என்பர் திருமூலர். "முப்புரமெரித்தது மும்மல காரியம்" அது போல அன்பரது மும்மலமழியத் தேர் ஊர்ந்து ஆடுக என்பதாம் சுவாமிகள் பல தேவாலயங்கள் சென்று பாடலியற்றினர் என்பது கருத்து. 5

## வேறு யாப்பு

தேங்கும் புகழ்சால் பழனியினிற்
செவ்வேள் புனையும் சீர்ப்பழனித்
திருவா யிரப்பேர் நூலொன்று
செப்பித் தங்கும் நாளையினில்

தீங்குந் திடும்நெஞ் சுடைப்பொதுவன்
சிறுபேய் வசத்தாற் செயும்கொலைகள்
சிந்தை யினிற்றுங் காது, துயர்
செறிந்தத் திருஏட் டினைஅன்பர்
ஏங்கும் படித்தீ யினில்இடுமா(று)
எடுக்கக் கறுப்ப வேற்பெயரோன்
இருதாள் பற்றிக் கட்புனல்ஆ
றென்ன வடித்துப் போற்றிடுகால்
ஓங்குஞ் சினந்தீர்ந் தருள்குரவா!
உருட்டி யருளாய் சிறுதேரே
உண்மைத் தவர்வாழ் மாதையினில்
உருட்டி யருளாய் சிறுதேரே.

வி-ம். சிறுபேய்-கருப்பனென்ற தேவதை கறுப்பவேற்கவண்டரென்ற உண்மையன்பர் சுவாமிகளின் சீடர். அடிகட்குத் திருவருளின்மீது ஊடல்பற்றி சினம் வரும். அப்போது பாடலுள்ள எட்டுச்சுவடிகளை-ஆறு கடல் குளம், தீ-இவற்றிலிட்டழிப்பர். அதுபோல், தன் மடாலயத்தின் எதிர்ப்புறம் நடக்கும் கொலையைச் சகியாராய் பழனித் திருவாயிரப்பாடல் எழுதிய ஏட்டினைத் தீயிலிட முயன்றனர். ஷை அன்பர் திருவடிகளைப்பற்றிக் கண்ணீர்விட்டழுது தடுத்தனர். அவ்வாறில்லையேல் இன்று அந்நூல் அழிந்திருக்கும். இப்படி அழிந்த பாடல் பல ஆயிரங்களாகும்

அடிகள் சீவகருணை மிக்கவர். கொலைபுலையை உலகிலேயே இல்லாமற் செய்ய விரும்புவர். நேரே நடக்கும் கொலையைத் தடுத்தனர். கருப்பன் உபாசனையினரான நாச்சிமுத்துச்சாமி யென்பவர் நடத்திவந்தனர். சாம-பேதம் என்ற முறையிற் கூறிவந்தனர் தண்டிக்கத் திருவருள் கூடவில்லை, எனவே அந்நூலையழிக்க முற்பட்டனர். இஃதல்லாமல்,

உபாசனையோர் மன வைராகங்கொண்டு தவம் புரியுங்கால், திருவருள்மீது ஊடல் வரும். அக்கால் மலையேறி உருளல். கடலில் விழுதல், வாள் முதலியவற்றால் உயிர்விட முயல்வர். இவ்வாறு. திருமலையேறி உருண்டனர் திருச்செந்தூர்க்கடலில் விழ முயன்றனர். திருவருள் காத்தது இதன் விரிவான வரலாற்றினை, அவரியற்றிய "குருபர தத்துவ" நூலிற் காண்க.

"மலைமுகட்டில் ஏறிநிலத் துருளத், தெண்ணீர்
வாரிதியின் நடுக்குதிக்க, வாட்கஞ் சாமல்
தலைகொடுக்கத் தீயில்விழத் தக்க வீரம்
சாரும்உபா சகர்க்குரிய தருமம்"

என்பர், கௌமாரமுறை நூலில்.

தெய்வ நம்பிக்கையுடன் வழிபடும்போது, இடர்ப்பாடு வரும். பின் உயிரை மதியார் உண்மையன்பர்கள். திருத்தொண்டர் புராணத்தில், மூர்த்தி நாயனார், அரிவாட்டாய நாயனார் போன்றோரது வரலாறுகள் எடுத்துக்காட்டாகும். இம்முறை வைராகத்தின்பாற்பட்டது. பத்தி ஞானத்தால் சோதனைகளைப் பொறுத்துப் பணிந்து அருள்பெறவேண்டுமென்பது கருத்து. திருவருட்செயலை யார் அளவிட்டுக் கூறமுடியும் ! 6

## சிறப்பியல்பு

*கொடுக்குந் தகையிற் றருவில் உயர்*
*கோனே! தேனேர் தமிழ்மாரி*
*கொட்டும் முகிலே! தவமலையே!*
*கொடிய பிறவிக் கடல்கடக்க*
*விடுக்குந் தோணி அனையானே !*
*விரும்பும் அடியார் தமக்கின்னல்*
*விளைப்பார்க் கெடுக்கும் தண்டொன்று*
*மிளிரும் கரத்தாய்! வினைப்பேயைத்*
*தடுக்குந் திருநீ றுடையானே!*
*தவத்தோர் தமக்கும் புலமைநலத்*
*தகவோர் தமக்கும் தாய்போல்வாய்!*
*தரங்கப் புணரி தனைத்துகிலா*
*உடுக்கும் புவனம் உயமாதை*
*உற்றாய்! சிறுதேர் உருட்டுகவே !*
*உயர்பாண் டியினில் திருநெல்லை*
*உதித்தாய்! சிறுதேர் உருட்டுகவே !*

வி-ம். தரு-கொடுப்பதில் சிறந்தது, ஆனால் போகப்பொருளையே அது தரும். குருநாதர் போகமும் வீடுபேறும் தருபவர். ஆதலின், 'தருவில் உயர்கோனே' எனப்பெற்றார். மாரியென்ற மழை பயன் கருதாமல் பொழிவது. அதுபோலப் பல்லாயிரம் தமிழ்ப் பாடல்களைப் பயன் கருதாமல் பொழிந்தவர் அடிகள். இவரது உபதேச குருவாயிருந்த, சீதாராம நாய்க்கரென்பவர் "ஓயாமாரி" என்று கூறினர். தோணியைப்போல்வது திருவடிகள் "பிறவிப் பெருங் கடல் நீந்துவர் நீந்தார்-இறைவனடி சேராதார்" என்பது குறட்பா. நீந்துதற்குப் பற்றுக்கோடாகத் திருவடிபுணையாகும் என்பதாம். அடியவரைச் சாரவருகின்ற பழவினையான பேயைப்போக்கியருள்வதற்கு உரியதென்பது பொருள். தண்டாயுதம் - ஊன்றுகோலென்பதல்ல-தன் அடியவர்கட்குத் தீங்கு செய்பவரைத் தாக்குதற்குரியதாகக் கொண்டனர் என்பதாம். அது மறக்கருணையிற்பாற்படும்.

தவம் புரிபவர்கட்கு உரிய உபாசனைக்கேற்ற வழிகளைத் தன் அநுபவமாகவும், புலமைபெற விரும்புவோர்கட்கு ஏற்ற இலக்கிய இலக்கண முறைகளை விளக்கமாகவும் நூல் வாயிலாயியற்றியமையால், அவ்விருவோர்கட்கும் தாய் என்றதாம். தரங்கப்புணரி – அலைகளையுடைய கடல். துகில் - உடை.

## வேறு-சந்தம்

**தனத்த தனதன-தனத்த தனதன-தனத்த தனதன**

*தவப்பு ளிதர்மிகும் அணிப்பு துவைநகர்*
*தனிற்சண் முகவேள்நேர்*
*தமிழ்ப்ப னுவல்மொழி தினத்தில், எனதொரு*
*சழக்கில் முகமேநீள்*
*நவப்பு ளகிதமெய் தலுற்ற(து) இனும்ஓர்ஐ*
*நலப்ப னுவல்கூறாய்*
*நலத்த மகிழ்(வு)அறு முகத்தும் உற,என*
*நகைத்(து)அ ன்னவன்ஓதோர்*
*நிவப்பு மொழிவழி இயற்று புலவ! இந்*
*நிலத்தர் உயர்வெய்வான்*
*நிறைத்த அறுவகை இலக்க ணமும்முனம்*
*நிகழ்த்து பெரியாய்!பார்*
*உவப்பு மலிவுற, இருக்கண் முழுதற,*
*உருட்டு சிறுதேரே*
*உயர்ச்சி பெறுசமி வனப்ப தியில்நிதம்*
*உருட்டு சிறுதேரே.*

வி-ம். சழக்குஇல்-துன்பமற்ற. நவப்புளகிதம்-புதிய மகிழ்ச்சி, ஐ-ஐந்தான, நலப்பனுவல்-நல்ல நூல்கள், நகைத்து-விருப்புடன், நிவப்பு-மேலான.

வி-ம். புதுவையில் அடிகள், சிவன் கோவிலில் உள்ள முருகப் பெருமான்மீது பனுவல் ஒன்று பாடினர். அன்றிரவு மனவெளியில் பெருமான் தோன்றினர். ஒரு பனுவலியற்றினை. எனது ஒரு முகமே மகிழ்ந்தது மற்றுள்ள ஐந்து முகமும் மகிழும்படி ஐந்து நூல்களியற்றுக என்றனர் அவ்வாறே ஐந்து நூல்களும் பாடினரென்பதாம்.

மற்றும், எழுத்து சொல், பொருள், யாப்பு அணி என்று இலக்கண வகை ஐந்தே உள்ளன அவற்றைக் கற்றுவருவதாயுள்ளது புலமை அப்புலமை எவ்வாறு இருக்கவேண்டுமென்று கூறினார் எவருமில்லை எனவே அவ்வித ஐந்துடன் ஆறுவதாகப் புலமையிலக்கணமுமாக ''அறுவகையிலக்கணம்'' புதிதாயியற்றினர் அடிகள். அதுமட்டுமல்ல,

சமயங்கள், சௌரம், சைவம், சாத்தேயம், வைணவம், காணு பத்தியம், கௌமாரம். என்ற ஆறுகும். இவற்றுக்கெல்லாம் ஆதாரமாகியும் அப்பாற்பட்டதுமான சமயம். சமயாதீதம். இவ்வேழின் வழிபாட்டுக்கு உரியதாகவே கிழமை ஏழு ஏற்பட்டன என்ற புதுக்கருத்தை விளக்கிப் பல நூல்கள் அம்முறையிற் பாடியுள்ளனர் ஆயிரக்கணக்கில். அதுபோல, இலக்கணத்தும் அம்முறையைக் கைக்கொண்டு சமயம் ஆறிற் கூறப்பட்டதும், கூறப்படாததுமான சிலவற்றை விளக்கி ஏழாமிலக்கணமொன்றும் இயற்றினர், இப்படிப் புதியன அனந்தம்.

சமி – என்பது வன்னிமரம். திருவாமாத்தூர் வன்னிக்காடாயிருந்து பின் ஊராயிற்றென்ற மரபுப்படி. சமிவனப்பதி என்று கூறலாயிற்று. வன்னி-சிவபிரானுக்குரிய பல பச்சிலைகளில் ஒன்று. 8

தத்தன தத்தன தனத்ததன தானு

அத்தமால் அற்றுயர் அணித்தவசு தோய்வார்
அற்பினுல் நித்தமும் அருச்சனைசெய் பாதா!
சித்தர்நா டத்தகு சிறப்புடைய தேவா
சிற்பரா! நத்தடியர் செத்துவர லேதீர்
சுத்தமா மெய்க்கதி பெறத்தரும்வி னோதா!
துய்க்குமூ ணிற்சுவைதொ லைத்தவ நேயா!
உத்தமா! நட்புடன் உருட்டுசிறு தேரே
ஒப்பில்மா தைக்குரு உருட்டுசிறு தேரே.

வி–ம். அத்தமால் – பொன்னசை. அற்பு – அன்பு. மெய்க்கதி-பிறப்பு இறப்பு அற்ற முத்தி. சுவை - நெல்லரிசியாலான எவ்வித உணவும் கொள்ளாமல். பச்சைப்பயற்றினுலான உணவைப் பல்லாண்டு நியதியாய் உண்டு வாழ்ந்திருந்தனர். எனவே ஊணிற் சுவை தொலைத்த தவநேயா என்று சிறப்பிக்கலாயிற்று. மூன்றாசையைத் துறந்தாலும், சுவையான உணவைத் துறப்பதரிது என்றவாரும். 9

தனதானதத் தனதானதத் தனதானதத் தனனு.

திருநீறுமுற் றணிதேவ!எற்–சிறுதேருருட் டுகவே
சிவமாம்உடற் பெறுவாய்!அணிச்-சிறுதேருருட் டுகவே
தெருள்நான்மறைப் பொருளாயநற்–சிறுதேருருட் டுகவே
செயமார்அயிற் படைமேவுகைச்–சிறுதேருருட் டுகவே

திருவோடுநற் கலைமாதுறச்-சிறுதேருருட் டுகவே
திகழ்வேய்வனத் தவதார!மெய்ச்-சிறுதேருருட் டுகவே
திருமாதையிற் குருநாதபொற்-சிறுதேருருட் டுகவே
செறிபேரருட் கவுமாரர்சொற்-சிறுதேருருட் டுகவே.

வி-ம். திருநீற்றினை உச்சியிலிருந்து உடல் முழுவதும் பூசி, முழுநீறுபூசிய முனிவராகக் காட்சியளிப்பவர் சுவாமிகள் "நீறணிந் திடாவயின் இலா உடலினேன்" என்று தாமே கூறியுள்ளார். சிவமாம் உடல்-சிவ சின்னமணிந்து விளங்குதல். அயிற்படையையே சிறுவயது முதல் இறுதிவரை வழிபட்ட சிறப்பு. திரு - பொருட்பேறும், கலைமாது - கல்விச்செல்வமும் தருபவர். வேய்வனமென்பது மூங்கிற்காடு, திருநெல்வேலியின் பழைய நிலை-அத்தலத்தில் அவதரித்தவர் சுவாமிகள் என்பதாம். 10

சிறுதேர்ப்பருவ முற்றிற்று.

ஆகப் பருவம் பத்துக்குக் கவி-10)

பிள்ளைத்தமிழ் முற்றிற்று.

குருபாதமே கதி.

---

நூற் பயன்

தண்டபா ணிக்குரவன் தன்புகழ்ப்பிள் ளைத்தமிழ்ப்பா
விண்ட நுதி னந்துதிக்கு மெய்யன்பர்—விண்டலமும்
மண்டலமும் போற்றுமுயர் வாழ்வடைவார், இன்பநிலை
கொண்டமைவா ரென்னையுண்மைக் கோள். 1

ஆக்கியோன் பெயர்

தேவுங் குருவுமொன்றாய்த் தேர்ந்தகவு மாரவுண்மை
மேவுதண்ட பாணியிரு மென்சலசப்—பூவுறழ்தாட்
சூட்டும்பிள் ளைத்தமிழ்ப்பாச் சொல்முருக தாசனவன்
தாட்டுணையன் பர்க்கடிமை தான். 2

பார்வையிட்டருளியவர்

சிரவைக்கௌ மாரமன்றின் தேவா விளங்கும்
குரவனிரா மானந்தக் கோமான்—விரவுமன்பாற்
கண்ணோக்கித் தந்த கவினுறுமிப் பிள்ளைவண்பா
விண்ணோர் அமுதினுக்கும் மேல். 3

## இந்நூல் அரங்கேற்றிய காலமும், உடனிருந்த சீலரும்

திருமேவு நெல்லையிற் றண்டபா ணிப்பெயர்த்
தேசிகன் திருவு ருவமாம்
சீர்கொள்வி காரிதொட்(டு) ஒருநூற தாகத்
திகழ்ந்தபிர மாதி ஆண்டில்
வருதேள்ம திக்கண்அத் தம்,புந்தி நாள்தேதி
வாய்ந்தஇரு பத்தொன் றினில்
மருவுஞ்ச தாபிடே கத்தில்,அவன் மரபின்முதல்
வருமுருக தாச னேன்
பெருகார்வ முறஇரா மாந்த குருபதம்
பேணிடுங் கந்த சாமிப்
பெயர்மாத வன்,செந்தி னயகமெ னுந்தந்தை
பெரிதுவப் புடன் மாதையில்
அருகார்ந் திருந்திடப் பிள்ளைத் தமிழ்ப்பாவை
ஐந்துநா ளிற்ப டித்திட்(டு)
அன்புடன் அரங்கேற்றி அன்றுமுற் றப்புரிந்
தனன்அன்பர் அகமகிழவே.

தேள்மதி – கார்த்திகை மாதம், புந்திநாள் – புதன்கிழமை, அத்தம்–தண்டபாணி சுவாமிகள் அவதரித்த நட்சத்திரம். சதாபிடேகம் – நூறுவதாண்டு நிறைவுபெற்ற நாள்.

குருபாதமே கதி.